# பெருமாளா.. பெரியாரா...?

## S வெங்கடராமன்


| | |
|---|---|
| **பக்கங்கள்** | **138** |
| **விலை** | **₹** |
| **முதல் பதிப்பு** | **நவம்பர் 2023** |





**20 A ராமன் தெரு, சிட்லப்பாக்கம்**

**சென்னை 600 064 -  +91 72002 67480**

**க**ண்ணபிரான் கோவிலுக்கு அருகில் பூமாலை வியாபாரம் செய்து வந்தார். அவர் எவ்வளவு நாளா இந்தத் தொழில் செய்து வந்தார் என்பது அவருக்கே தெரியாது. அவரின் அம்மா அவர் அப்பா செய்து கொண்டிருந்த வேலையை அப்பாவின் மரணத்திற்குப் பின்பு செய்து வந்திருந்தார். அவரிடமிருந்து அந்த உரிமையைப் பெற்று பூமாலை வியாபாரம் செய்து வந்தார். அவரிடம் ஒரு நம்பமுடியாத நாணயமும் கோவிலுக்குச் செய்கிறோம் என்ற மரியாதையும் இருந்தது.

ஒரு நாள் இரவு ஒரு பக்தர் அவசரஅவசரமாக வந்து ஒரு மாலை இவரிடம் வாங்கி 500 ரூபா நோட்டு கொடுத்துவிட்டுச் சில்லரை வாங்காமலே கோவிலுக்குள் ஓடிப் போய்விட்டார். சின்னசாமியும் அவர் திரும்பி வருவார் என்று ரொம்ப நேரம் காத்திருந்தார். அவர் திரும்பி வரவில்லையானதால் கண்ணபிரான் கடையைப் பூட்டிக்கொண்டு வீட்டுக்குச் சென்றுவிட்டார்,

காசு கொடுத்தவர் அடுத்தநாளும் வரவில்லை. நாலைந்து நாட்களும் சென்றுவிட்டன. இத்தனைக்கும் அவர் தெரிந்தவரோ உள்ளூர்க்காரரோ இல்லை.

சிலநாட்கள் கழித்து அவர் கோவிலுக்கு வந்து தான் அவசரமாக ஊருக்குப் போய்விட்டதாகவும் சில நாட்களுக்கு முன்பு 500 ரூபாய் கொடுத்து ஒருமாலை வாங்கியதாகவும் பாக்கிச் சில்லறை வாங்கிக்கொள்ளாமல் போனதாகவும் சொன்னார்.

கண்ணபிரான் சிரித்துக்கொண்டே, ”சாமிக்கு ரொம்ப அவசரம் போலிருக்கு” என்று சொல்லி மீதியைக் கொடுத்தார்.

பக்கத்துக் கடைக்காரர் “வந்தவர் கிட்டே போட்டோ கொடு கண்ணபிரான். அவர் ஒனக்குச் சிலை வைப்பர்” என்று கேலி பேசினார்.

விசேஷங்களுக்குத் தாமதமாக பூமாலை கொடுத்தார். பக்தர்கள் காத்திருந்தார் என்ற பேச்சுகே இடமில்லை. கோவிலுக்குள் ஏதாவது விசேஷம் என்றால், அதுவும் மனைவி பாலா எங்கிற பாலாயி வந்தால் கூடப் போவார். ஆனால் அது கூட வியாபாரம் மந்தமாக இருந்தால்தான். ஆனால் பாலாயி குழந்தையைக் கூட்டிக் கொண்டு வாரத்தில் இரண்டு நாளாவது வந்து விடுவாள்.

கண்ணபிரான் பெண் கோதையும் அருகிலுள்ள அரசு பள்ளிக்கூடத்தில் 8வது வரை படித்துவிட்டுப் பக்கத்துக் கிராமத்தில் +2 படித்தாள். அரசு கொடுத்த சைக்கிள் கோதைக்கு ரெம்ப உதவியாய் இருந்தது. 4 மைல் தள்ளி உள்ளப் பக்கத்துக் கிராம ஸ்கூலுக்கு தன் நண்பர்களோடு சைக்கிளில் போய் வருவது அவளுக்கு அலாதி சுகம் கொடுத்தது. சைக்கிள் சவாரி அவளுக்கு அவள் அறியாமல் தேக ஆரோக்கியத்தை அள்ளிக் கொடுத்திருந்தது. இந்த ஆரோக்கியம், கள்ளம் கபடற்ற உள்ளம், நல்ல சூழ்நிலை, வயது எல்லாம் ஒரு சரியான கலப்பில் சேர்ந்து அவளை அழகி ஆக்கியிருந்தது. கோதை +2 முடித்துவிட்டு தொலைதூரக் கல்வி மூலம் பி. ஏ தமிழ் படித்துக் கொண்டிருந்தார்.

ஒரு வெள்ளிக்கிழமை தோழி கமலாவுடன் சேர்ந்து பக்கத்து ஊர் திருவிழாவிற்கு சைக்கிளில் சென்றாள். சைக்கிளில் திரும்பி வந்து கொண்டிருந்த போது எதிர்பாராமல் சைக்கிள் செயின் அறுந்து விட்டது. அந்த பாதை நன்கு பழகியதால் பக்கத்தில் சைக்கிள் கடையோ, வீடோ கிடையாது என்று நன்று தெரியும்.

கூட வந்திருந்த கமலா ஒரு ஐடியா கொடுத்தாள்.

“செயின் தானே அறுந்து விட்டது. என் சைக்கிளில் பின்னல் உட்கார்ந்து உன் சைக்கிளை பிடித்துக் கொண்டு வா. நாம போய்டலாம்”.

ஐடியா என்னவோ நன்றாகத்தான் இருந்தது. முன்பின் அந்தமாதிரிப் பழக்கம் இல்லாததால் கோதை கீழே விழுந்து லேசான அடியுடன் தப்பித்தாள்.

“என்னடி பண்ணறது? சைக்கிளை ஒட்டிக்கிட்டு போகமுடியாது. விட்டுட்டும் போகமுடியாது என்ன பண்ணலாம்?”

“எனக்கு ஒரு வேறு ஒரு ஐடியா வந்திருக்கு.”

“உன்னோட ஐடியா எதுவும் வேண்டாம். உன் ஐடியா கேட்டு கை காலை உடைத்துக்கொள்ள நான் தயாராக இல்லை.”

கோதையும் கமலாவும் சைக்கிளை எப்படி எடுத்துச்செல்வது என்று தலை காய்ந்தார்கள். ஒரு வழியும் புலப்படவில்லை.

அப்போது அந்த வழியில் ஒரு இளைஞனும் பின்னால் இன்னொரு இளைஞனும் சைக்கிளில் வந்து கொண்டிருப்பது கண்டு, “பாத்தியா! கடவுள் காப்பாத்திட்டார்.” என்றாள் கமலா கத்திக்கொண்டு

“அண்ணே! அண்ணே! கடவுளா பாத்து உங்களை அனுப்பி இருக்கார். ஒரு உதவி வேணும் அண்ணே” நம்பிக்கையுடன் சொன்னாள்.

“தங்கச்சிங்களா, கடவுளுக்கு இப்போ வேலை இல்லை. ஜாலியா எங்களை இப்போ உங்களோடு அரட்டை அடிக்க அனுப்பி உள்ளார்.”

சைக்கிளில் வந்தவன் பேச்சில் நக்கல் தெரிந்தது.

“என்ன தங்கச்சிங்களா? இங்கே இந்த காட்டில் என்ன பண்ணிக்கொண்டு இருக்கிறீர்கள்” என்றான் சைக்கிளில் வந்தவன்

“நாங்க இந்த காட்டிலே எங்கயாச்சும் தங்கம் கிடைக்குமா? என்று தேடிக்கிட்டு இருக்கோம்”. கிண்டலாக பதில் சொன்னாள் கமலா.

“சும்மா இருடி, இங்கே யாரையுமே காணவில்லை. ஒரே சின்ன உதவி வரமாதிரி இருக்கு அதைக் கெடுத்துடாதேடி. அவரிடம் என்ன கிண்டல் கேலிப்பேச்சு?” என்ற கோதை “அண்ணே என் சைக்கிள்ளே செயின் அறுந்து போச்சு. நாங்க என்ன செய்யறதுன்னு தவிச்சுக்கிட்டு இருக்கோம். இன்னும் இரண்டு கிலோ மீட்டர் போகணும்.” என்று கேட்டுக்கொண்டாள்.

கோதையின் வெகுளி பேச்சு வேலை செய்தது.

“அப்படியா, நான் பார்க்கவா?” என்று கேட்டான் சைக்கிளில் வந்தவன்.

“தாராளமாக. ஏதாவது பண்ணி சைக்கிளை ஓட வைத்தால் உங்களுக்கு ரொம்ப புண்ணியம்” கை எடுத்துக் கும்பிட்டாள். கோதை.

“அதெல்லாம் வேண்டாம் நான் பார்க்கிறேன்.”

குனிந்து சைக்கிளை நிமிர்த்தி செயினை மாட்டினான்.

“இதிலே ஒரு லாக் வருமே எங்கே?”

“நாங்க பார்க்கல்லே. எங்களுக்கு அது பற்றி தெரியாது.”

“அந்த லாக் இல்லேன்னா செயினை போட முடியாது. ஆனால் எங்களால் இந்த சைக்கிளையும் என் சைக்கிள் கூட ஒட்டி வர முடியும்.”நீ உன் ஃப்ரண்டு கூட பின்னால் உட்கார்ந்து வந்துவிடு “

“ரொம்பரொம்ப தேங்க்ஸ். அண்ணே இதுவே பெரிய உதவி.”

அவன் தன் சைக்கிளே ஒட்டிக் கொண்டு போக அவன் நண்பன் அந்த பழுதான சைக்கிளைப் பிடித்துக் கொண்டு வந்துவிட்டான்.

ஊரும் வந்து விட்டது.

“இந்த கடை என் நண்பனுடையது. இங்கேயே சைக்கிளை விட்டு விட்டு போங்க. அவன் வெளியிலே போயிருக்கான்.”

“நாளை ஸ்கூல் கிடையாது”.

“நல்லதாய் போச்சு. நான் அவனை சரி பண்ணி வைக்கச் சொல்கிறேன் மத்தியானம் வந்தால் சைக்கிள் சரி பண்ணி வைத்திருப்பான்.”

“தேங்க்ஸ், தேங்க்ஸ் அண்ணே.”

பரபரப்புடன் தேங்க்ஸ்கள் தாராளமாக வெளிப்பட்டன.

மறு நாள் சைக்கிளை எடுக்க வரும் போது சைக்கிள் பழுது பார்க்கப்பட்டு தயாராக இருந்தது.

“எவ்வளவு காசு தரவேண்டும்?” கோதை கேட்டாள்.

“சைக்கிள் கொண்டு விட்டவன் தன் நண்பன் என்றும் காசு ஒன்றும் தேவையில்லை.” அந்த கடைக்காரன் சொன்னான்.

“டபுள் தேங்க்ஸ். எனக்கு உதவின அண்ணன் உங்க நண்பரா?”

“ஆமாம் என் நண்பர் தான். கொஞ்சம் வித்தியாசமானவர்”.

“அப்படின்னா?” கோதை ஒரு வியப்பை வெளிப்படுத்தி கேட்டாள்.

“நல்லவர். கடவுள் இல்லை கட்சிக்காரர்”.

“அப்படியா. அதான் அவர் பேச்சில் தெரிந்தது”.

கடைக்காரர் மூலம் முதல் நாள் தனக்கு உதவியவன் பெயர் சேகர் என்றும், மின்சார வாரியத்தில்ல் எலக்டிரிஷியனாக வேலை செய்கிறார், என்றும், அவன் ஐ.டி.ஐ படித்திருகிறார் என்றும் அறிந்து கொண்டாள்.

கோதை தன் அப்பா அம்மாவிடம் சேகர் எப்படி தனக்கு ஒரு இக்கட்டான சமயத்தில் உதவினான் என்று சொன்னாள். அப்பாவிடம் சொல்லி அவருக்கு ஒரு தேங்க்ஸ் சொல்லசொன்னாள். அவள் சாமர்த்தியமாக சேகர் கடவுள் இல்லை கட்சிக்காரர் என்பதை தவிர்த்து விட்டாள்.

கண்ணபிரான் சேகர் வீட்டுக்கு போய்த் தன் மகளுக்கு சரியான நேரத்தில் உதவியதற்காக நன்றி சொன்னார்.

“நம்ம ஊர் பாப்பா. ஐயா எப்படி அப்படியே விட்டு வருவது? இதெல்லாம் எல்லோரும் செய்வது தான். இதுக்கு போய் நீங்க இவ்வளவு தொலைக்கு வந்து நன்றி சொல்லணும்னு நினைக்கிறீங்க. அதுதான் பெரிசு”. என்றான் சேகர்.

முதல் சந்திப்பில் இருவருக்கும் மற்றோருவர் மேல் மரியாதை ஏற்பட்டது.

சேகரும் அவள் தந்தையிடம் பேசி அந்தப் பெண் பெயர் கோதை என்றும் கோவிலில் மாலை கட்டி வியாபாரம் செய்பவர் பெண் என்றும் படிப்பில் ரொம்ப சுட்டி என்றும் தொலைதூரக் கல்வி மூலம் பி. ஏ தமிழ் படித்துக் கொண்டிரு க்கிறாள் என்றும் தெரிந்து கொண்டான்.

சேகருக்கு கோதையைப் பிடித்துப் போய்விட்டது. கோதைக்கும் சேகர்மேல் முதல் சந்திப்பிலேயே ஒரு இது வந்து விட்டது.

சேகரும் தன் அப்பாவிடம் கோதையை சந்தித்தது, அவள் உதவி கேட்டது, அவளுக்கு உதவியது பற்றி விலாவரியாகச்

சொன்னான். அவள் அப்பா நேரில் வந்து நன்றி சொன்ன நயத்தை சொன்னான். கடைசியில் அவளை அவனுக்கு ரொம்ப பிடித்திருப்பதாகவும் சொன்னான்.

கண்ணபிரான் தன் மகள் மனம் அறிந்து சேகர் பற்றியும் அவன் குடும்பம் பற்றியும் விசாரித்தார்.

"கோதை அந்த பையனைப் பற்றி விசாரித்தேன். அவன் கடவுள் இல்லை கட்சியாம். அவன் உனக்கு ஒத்து வரமாட்டான்." என்று சொன்னார் கண்ணபிரான்.

"சரிப்பா, எனக்குப் பெருமாளைப் பார்க்காமல் அவரை நினைக்காமல் இருக்க முடியாது. நீங்கள் சொன்னால் சரிதான். அவரைப் பார்த்தவுடன் ஆசைப்பட்டது உண்மைதான். அதுவும் வயது கோளாறு என்று தெரிந்துகொண்டுவிட்டேன். அதற்காக காலம் பூரா அவருடன் போராட நான் தயாராக இல்லை."

கோதையின் பெருமாள் பிடிப்பு அவளை அவளுடைய நிலைக்கு கொண்டு வந்து விட்டது.

கோதை அத்தோடு விட்டு விட்டாள்.

ஒரு வாரம் கழித்திருக்கும். கடை வீதியில் கோதையை தற்செயலாய் சந்தித்தான் சேகர்.

"என்ன கோதை ஆளேயே பார்க்க முடியவில்லை"

"பரிட்சைக்குக்கு படித்து கொண்டிருக்கிறேன். நீங்கள் கடவுள் இல்லை கட்சியாமே என் அப்பா சொன்னார்."

"ஆமாம். என் அப்பா அந்த கட்சி. நானும் அந்த கட்சிதான்."

"அது தான் எங்க அப்பாவும் சொன்னார். எங்களுக்கு பெருமாள்தான் எல்லாம். உங்களைக் கட்டிக் கிட்டா சரியாக வராதுன்னார்."

“நீ என்ன சொன்னே?”

“அப்பா சொன்னது சரின்னு சொல்றேன். என்னோட நலத்திலே எங்க அப்பாவைவிட யாருக்கு அக்கறை இருக்கும்? எப்படிங்க ஒத்து வரும்.”

“எங்க கட்சியில் பெண்களுக்கு மதிப்பு கொடுக்கணும். மத்தவங்களை யாரும் சாமி பேர் சொல்லி ஏமாத்தக்கூடாது. மத்தவங்க மனசு புண்படும்படி எதுவும் செய்யக்கூடாது அப்படிதான் சொல்றாங்க. சாமி கும்பிடக்கூடாதுன்னு யாரும் சொல்லறதில்லே.”

“ஐயா நீங்க விஷயம் தெரியாது பேசுறீங்களா? இல்லை எனக்காக பேச்சு மாத்தி பேசுறீங்களா?”

“என்ன அப்படி கேக்குறே?”

“பின்னே என்ன எல்லா செவத்திலேயும் கரியை வச்சு கிறுக்குவீங்க. உங்களுக்கு கடவுள் இல்லைன்னா நீங்க போக வேண்டியது தானே. கடவுள் நம்பறவங்க காட்டுமிராண்டி கடவுளை நம்பறவன் முட்டாள் யாராவது உங்களை கேட்டங்களா? அவங்க யாருன்னுட்டு? ஆனா யார் மனசையும் புண்படுத்துறதில்லேன்னு பேசுவீங்க. கோவிலுக்கு போகாதேன்னு மறியல் செய்வீங்க. ஆனால் சாமி கும்பிடக்கூடாதுன்னு சொல்லறதில்லேன்னு சொல்லுவீங்க. சாமி என்னை விட்டுடுங்க. நமக்கு ஒத்து வராது. எதோ வயசு கோளாறு. நீங்க ட்ரிம்மாகவும் இருக்கீங்க. நல்லாவும் பேசுறீங்க. நாம நல்ல நண்பர்களாக இருப்போம். அது உங்களுக்கும் நல்லது. எனக்கும் நல்லது. எதோ சினிமா போல பாத்தவுடன் காதல், நீ இல்லேன்னா உலகத்திலே ஒண்ணும் இல்லை. உனக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன். நீ தான் வேண்டும். நம்மை பிரிக்க யாராலும் எந்த

சக்தியாலும் முடியாது அப்படி இப்படி டயலாக் விட்டு விட்டு நாம இரண்டு பெரும் கட்டிக்கிட்டு தினம்தினம் சண்டை போட எனக்கு சக்தியும் கிடையாது. பாவம் என் அப்பா அம்மா நொந்து போய்டுவாங்க.”

“கோதை நீ முடிவா என்ன சொல்றே?”

“நான் தான் தெளிவா சொல்லிட்டேனே. நம்ம நண்பர்களாகவே இருந்திடலாம்.”

“கோதை, அது பழையகாலம் அப்போ என்னமோ சொன்னாங்க‘ ன்னுட்டு ரோடு, சுவர் எல்லாம் கிறுக்கினோம். அதை விடு எனக்கு உன்னை பிடிச்சிருக்கு உனக்கு என்னை பிடிச்சுருக்கு. சாமியால நாம ஏன் பிரியணும். உனக்கு வேணும்னா சாமி கும்பிட்டுவிட்டு போ. இப்போ எங்க தலைவர்கள் நிறைய பேர் மனைவிகள் கோயிலுக்கு போயிட்டுவர்ராங்க. அவங்க மனைவிக்கு சுதந்திரம் கொடுக்கிறோம். அது அவங்க சொந்த விஷயம். சொந்த விஷயத்திலே நாங்க தலையிடமாட்டோம்னு சொல்லுறாங்க. நானும் அப்படியே சொல்லிடறேன்”

“எனக்கு இது ஒத்து வரும்னு தோணல்லே. அப்பா என்ன சொல்கிறார் என்று பார்ப்போம்”

“நீ என்ன சொல்வே?”

“நான் அப்பா பொண்ணு. அவர் எனக்கு நல்லது தான் செய்வார். அவர் என்ன சொல்வாரோ அதையே கேட்பேன். ஆனா ஒண்ணு சேகரா சாமியா ன்னு கேட்டா ஒரு தயக்கமும் இல்லாமல் சாமிதான் னு சொல்லிடுவேன்.”

“ஐயோ சாமியோட நான் போட்டிபோடமுடியாது. ஆனாலும் என் உள் மனது நம்ம கட்டிக்குவோம்னு சொல்லுது. ஐயயோ, நாம இப்போ என்ன செய்யணும்?”

“நான் கடவுள்கிட்ட வேண்டிப்பேன். நீங்க வேணா தலைவர் கிட்ட வேண்டிக்கிங்க “ சிரித்துக்கொண்டே சொன்னாள். கோதை

“நீ கடவுள் கிட்டே என்ன வேண்டிப்பே?”

“உங்களுக்கு நல்ல புத்தி குடுன்னுட்டுத் தான்”

“ஏன்? இப்போ எனக்கு நல்ல புத்தி இல்லையா?”

“என்னை பொறுத்தவரை இல்லைதான். நான் வேணா எனக்கு பிடிக்கிறமாதிரி நல்ல புத்தி குடுன்னுட்டு வேண்டிப்பேன். பை “

கோதை வீட்டிற்கு செல்லும் வழியெல்லாம் சேகர் சிந்தனைதான். இவர் நல்லவர் மாதிரி தெரிகிறார். அன்று தனி வழியில் வரும் போது கூட வம்பு, தும்பு எதுவும் பேச்சில் கூட வரவில்லை. அடுத்தவருக்கு எதுவும் எதிர்பார்க்காமல் உதவும் எண்ணம் இருக்கிறது. எதற்காக அன்று உதவினார்?. உதவிவிட்டு அதை வைத்து விலாசம் கேட்டோ, போன் நம்பர் கேட்டோ, தொடர்பை நீட்டிக்க எந்த வித முயற்சியும் செய்ய வில்லை. வீடே வந்து விட்டது.

சரி விடு, நடப்பது நடக்கட்டும். பெருமாளே! உனக்கு என்னையும், என் அப்பாவையும் தெரியும். எங்களுக்கு நல்லது என்னவோ, அதை செய். சாரி சாரி நீ எதை செய்கிறாயோ அது எங்களுக்கு நன்மைதான் என்று எண்ணுகிற பக்குவத்தை எங்களுக்கு கொடு.

இரவு சாப்பாடு முடிந்து படுக்கப் போகும்போது அப்பா, “கோதை கொஞ்சம் வாம்மா. உங்கூட பேசணும். நீயும் வா” என்று கூப்பிட்டார்.

மனைவியையும் கூப்பிட்டார்

“என் நீண்ட நாள் நண்பர் மின்சாரவாரியத்தில் வேலை செய்கிற வேலாயுதம். அவருக்கு இன்னிக்கு கல்யாணம் ஆகி 25 வருஷங்கள் ஆகிறதாம். கோவிலுக்கு வந்தார்.

“என்னைப் பார்த்து உங்களை எல்லாம் விசாரித்தார். எனக்கு அந்தத் தம்பி பேர் ஞாபகத்துக்கு வரவில்லை. ‘அந்த பையனோட அப்பா கடவுள் இல்லை கட்சியாம். உனக்கு தெரியுமா”ன்னு கேட்டேன். ‘அப்படியா, அவர் அரசியல்வாதி. அவர் பையனை நிறைய பைசா கொடுத்து சேர்த்தார். பையன் பெயர் சேகர். சின்னவயது. துருதுருன்னு இருப்பான்’ன்னு அவர் சொன்னார்.

“ஆமாம். அந்த பையன் தான் என் பெண்ணை தற்செயலாக சந்தித்து இப்போ தான் சினிமா டி.வியில் கண்டதும் காதல்னு சொல்லித் தர்ராங்களே. அதிலே பிடிச்சிருப்பான் போல இருக்கு. பெண்கிட்டே ‘உன்னை பிடிச்சிருக்கு. அப்பாகிட்டே கேட்டு சொன்னா, என் அப்பாவை பெண் கேட்டு வரச்சொல்கிறேன்’னு சொல்கிறான்.”

“பெண்ணுக்கு எப்படியோ?” நாசுக்காக விசாரித்தார்.

“‘பெண்ணுக்கு இஷ்டம்போல் தோணுகிறது ஆனால் பெண்ணுக்கு பெருமாள் மேல் ரொம்ப ஆசை. சின்ன வயசிலிருந்தே பெருமாள் பழக்கம் இந்த பையன் கடவுள் இல்லைன்னு பிரச்சாரம் பண்ணறவன். ஒத்து வருமா? கல்யாணம் ஆயிரம் காலத்துப் பயிரு’ன்னு சொன்னேன்”. அதற்கு நண்பர் ‘இப்போ அவங்க சொல்ல சொல்லக் கோயில்கள் பெருகி வருகிறது. கோயில்லே கூட்டங்கள் ஜாஸ்தியாகி விட்டது. ஏன் அந்த கட்சித் தலைவர்கள் மனைவிகளே கோவில் கோவிலாகத் சுத்த ஆரம்பித்து விட்டார்கள். உன் பொண்ணை எனக்கு நல்லாத் தெரியும். சாமர்த்தியசாலி அவனை சரி பண்ணிடுவா. இன்னொரு விஷயம். அவன் சுயமடரியாதைக் கட்சி அது, இதுன்னு சொல்லி விட்டு

அனாவசியமாய் அதை பண்ணு, இவ்வளவு நகை வேண்டும் என்று உன்னைத் தொந்தரவு பண்ணமாட்டான். பையன் கை சுத்தம். லஞ்சம் கிடையாது. நாங்க கூட அரசியல் சிபாரிசிலே வந்த பையன்னு நினைச்சோம். வேலை கொடுத்தா, உடனே செய்து விடுவான். அனாவசியப் பேச்சு கிடையாது. மொத்தத்தில் நல்ல பையன். கடவுளை விட்டு விடு, அவர் பார்த்துப்பார்"ன்னு சொல்றார்."

கண்ணபிரான் தொடர்ந்தார்."உங்களுக்குத் தெரியும் என் நண்பர் நெடுநாள் நண்பர். நமக்கு நல்லது தான் செய்ய ஆசைப்படுவார். கோதை நீ சொல்லு உன் அபிப்ராயம் தான் இதில் முக்கியம்".

"அப்பா, இதில் நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது?"

"அப்படி இல்லேம்மா. வாழப்போறவ நீ. நீ தான் அந்த "கடவுள் இல்லே" சூழ்நிலையிலேச் சமாளிச்சுக்கிட்டு வாழனும். சிரிச்சுக்கிட்டே சொன்னார். உன்னால சமாளிக்க முடியுமா. என் பக்கத்திலே ஒண்ணும் பிரச்சினை இல்லே. அவசரமில்லேயம்மா. யோஜனை பண்ணி இரண்டு நாளிலே சொல்லிடு"

"அப்பா, எனக்கு அடுத்த வாரம் பரீட்சை முடிந்து விடட்டும். அப்புறம் இதைப்பத்தி பேசலாம்"

"இது நல்ல யோஜனை அம்மா"

பரீட்சை முடிந்து,

"கல்யாணத்திற்கு என்ன சொல்லலாம்?"

கோதையிடம் 'அவள் அப்பா..' என்று ஆரம்பித்தார்

கோதையும் இந்த விஷயத்தை தன் சாமர்த்தியத்திற்கு ஒரு சவாலாக ஏற்றுக் கொள்ளலாம் என்று நினைத்து, "இது நாள்

வரையில் என்னை காப்பாத்திய பெருமாள் என்னை விட்டு விடமாட்டார். இதுவும் அவர் சித்தம்”

கண்ணபிரான் பெண்ணின் சமர்த்தியத்தை மனதுக்குள் நினைத்து பெருமை கொண்டார்.”நீ கெட்டிக்கார பெண் அம்மா. எங்கேயும் நீ சமாளித்துக் கொள்வாய்”

“நான் யார் பெண் அப்பா?”

மறுபடியும் மனது மகிழ்ச்சி கொண்டது.

பின்பு கண்ணபிரான், தன் நண்பர் வேலாயுதம் மூலம் சேகர் அப்பாவுக்குத் தெரியப்படுத்தினார்.

பரீட்சை முடிந்த பின்பு கோதை. அம்மாவுடன் கடை வீதியில் தற்செயலாக சேகரை சந்தித்தாள்.

“கோதை, என்ன ரொம்ப நாளா ஆளைக் காணோம்”

நாசுக்காக விசாரித்தான்.

‘“இவங்க என் அம்மா’”

ஒரே வரியில் எல்லாவற்றையும் விளக்கினாள்.

“ஆ, அப்படியா”

அவள் அறிவை வியந்தான். ஓத்த வரிலே ஒரு விளக்கத்தையே சொல்லிட்டாள்.

“வணக்கம் அம்மா, நான் உங்க பெண்ணை ஒரு வேடிக்கையான சூழ்நிலையில் சந்தித்தேன். என் பெயர் சேகர்”

“ஆமாம், கோதை எல்லாவற்றையும் சொல்லி இருக்கா”.

அப்பா, ரொம்ப வளர்த்தல் இல்லாமல் சொல்ல வேண்டியதை சுருக்கமாய் சொன்ன கோதை அம்மா பாலாயியின் சாமார்த்தியத்தைக் கண்டு வியந்தான்.

ஓரக்கண்ணால் இருவரும் ஜாடை செய்து கொண்டு அன்பை வெளிப்படுத்திக் கொள்ளத் தவறவில்லை.

"கோதை நீ பேசிக் கொண்டிரு. நான் இந்த டைலர் கடைக்கு போய் ஜாக்கெட் தைத்து விட்டாரா? ரெடியாக இருக்கான்னு? கேட்டுட்டு இரண்டு நிமிஷத்தில் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு பாலாயி கடைக்குள் சென்றார்.

பாலாயி தற்செயலாக இதை செய்தாரா? இல்லை இருவருக்கும் பேசிக்கொள்ள வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுப்பதற்காக செய்தாரா? அவனுக்கு புரியவில்லை. எப்படியிருந்தாலும் கிடைத்த வாய்ப்பை வீணாக்க அவன் விரும்பவில்லை.

"என்ன கோதை, பரீட்சை எல்லாம் எப்படி எழுதியிருக்கே, நீ பாஸ் பண்ணிடுவே, அதிலே ஒண்ணும் சந்தேகம் இல்லே. பேப்பரிலே பேர் தனியா வருமா? அதில்தான் சஸ்பன்ஸ்."

"ரொம்ப புகழறீங்க"

கோதை நாணத்தில் தலை கவிழ்ந்தாள்.

"சரி, உங்க அம்மா வந்து கொண்டிருக்காங்க. சொல்லு நம்ம கேஸ் என்னவாயிற்று. அப்பா, அம்மா சரின்னு சொல்லிட்டாங்களா?. என் அப்பாவை பெண் கேட்டு வரச்சொல்லவா? ரொம்ப டென்ஷனாக இருக்கு."

"அப்படியா,"

கோதை இழுத்த சமயம் அம்மா வந்து விட்டார்கள். கோதை தன் தலையை சந்தோஷத்துடன் ஆட்டியது சேகருக்கு தெம்பையும் தைரியத்தையும் கொடுத்தது.

“சரி நான் வரேன் ஆண்டி. அப்பா உங்களைப் பார்த்தால் எப்போ வரலாம் என்று கேட்கச் சொன்னார்”

“அவர் கூட சொல்லி அனுப்ப வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். இன்று திங்கள்கிழமை வருகிற ஞாயிறு அல்லது அடுத்த வெள்ளிக்கிழமை நாள் நன்றாக இருக்குமாம்.”

“சரி, ஆண்டி அப்பாகிட்ட சொல்லிடுறேன் ஆண்டி, உங்க வீட்டு போன் நம்பர் சொல்லுங்க”

“எங்க வீட்டிலே போன் கிடையாது. அவருக்கிட்ட செல் இருக்குது. 98843201 அவருக்கிட்டே சொல்லிடுங்க.”

“ஆண்டி தப்பா நினைக்காதீங்க்க. உங்களை பார்த்து எப்படி சொல்றதுன்னு நான் தயங்கிக் கிட்டு இருந்தேன். நல்ல வேளையா இப்போ சந்திதிட்டு விட்டோம் நாம இப்படி சந்திப்போம்னு நினைக்கவில்லை”

“உங்க வேலாயுதம் மாமாவும் ஒரு மாத லீவில் இருக்கிறார். கோவில் பக்கத்திலே தான் என் வீடு இருக்கு.”

“சாரி, ஆண்டி கோதை தான் நான் அந்த பக்கமே வரக்கூடாது என்று 144 போட்டிருக்காங்களே”

“சரி நாங்க வரோம்”

பொதுப்படையாகச் சொல்லி பாலாயி நகர ஆரம்பித்தார்.

“செய்யுங்க அம்மா,”

வாய் சொல்லியதே தவிர கண்கள் கோதையிடம் ஏதோ பேசிக்கொண்டிருந்தன. கோதையும் தன் பங்கிற்கு வலது கட்டை விரலை உயர்த்திக்காட்டி வெற்றியை சொல்லிக் கொண்டிருந்தாள்.

“பையன் நல்ல மாதிரியாய் மரியாதை தெரிந்தவனாய் இருக்கிறான். இல்லை கோதை. இந்தக் காலத்தில் மரியாதையாய்ப் பேசக்கூட நிறையப் பையங்களுக்குத் தெரிவதில்லை”.

“நானும் கேட்டுட்டேன் அம்மா, பீடி, சிகரெட், சாராயம், drinks ஏதாவது இருந்தா சொல்லிடுங்கன்னுட்டு. ஐயயோ, அது எல்லாம் ஒண்ணுமில்லை. ‘கொஞ்சம் ஜர்தா மட்டும் போடுவேன்’ என்றார். ஜர்தாவையும் விட்டுவிட்டால் மட்டும் பேசுங்க. மற்றதைப் பார்க்கலாம் என்றேன். அம்மா மகாராணி உங்கள் கட்டளைப் படி ஜர்தாவை விட்டு விட்டேன். நீங்கள் வேறு என்ன செய்யச் சொல்கிறீர்கள் என்று போன முறை சந்திக்கும் போது சொன்னார்.”

கோதை பெருமையுடன் அம்மாவிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்

சேகர் வீட்டிற்கு ஃபோன் செய்து அப்பாவிடம் விஷயத்தைச் சொன்னான். சேகரின் சந்தோஷத்தை அவன் பேச்சு முழுதும் வெளிப்படுத்தியது

சேகர் அப்பா தனது கட்சி நண்பர்களைக் கேட்டார்.

‘டே இந்தக்காலத்தில் நல்ல பொண்ணு கிடைக்குகிறதே ரொம்ப கஷ்டம். எல்லோரும் டிவி பாத்துக் கெட்டுப் போய்ட்டாங்க. கொள்கை அது இதுன்னு சொல்லி வர நல்ல பொண்ணை விட்டுடாதே சாமியை கும்புடுறவங்க. பொண்ணை நல்லாவே வளர்த்திருப்பாங்க. போறாக்குறைக்கு பையன் வெளிப்படையாகவே அவளைத்தான் கட்டிகுவேன்னு சொல்லிட்டான்னு சொல்றே.’

நம்ம கதிர்வேலு சமாச்சாரம் தெரியுமில்லே. பொண்ணு கதிர்வேலு பையன்கிட்டே கல்யாணம் செய்யும்போது பூணூல் போட்டே ஆகணும்னு சொல்லிட்டா. நீங்க இதுக்கு சரின்னு

சொல்லுங்க. நான் உங்ககூட அட்ஜஸ்ட் பண்ணி சந்தோஷமா இருப்பேன்னு சொல்லி அவனை ஏத்திவிட்டுட்டா.

அதுமட்டும் வேணாம்டான்னு எவ்வளவோ கேட்டார். கதிர்வேலு.

அவன் சரியான விவரமானவன். என்ன அப்பா இப்படி உளறிக்கிட்டு இருக்கீங்க இங்கிலாந்து அரச பரம்பரைக்காரன் கட்டிக்கப்போற பெண்ணுக்காக அரச பரம்பரையே வேணாம்னுட்டான். கடவுள் இருந்தா என்ன? இல்லைன்னா என்ன? நீங்க அப்பாவா இருந்து வாயை மூடிக்கிட்டு கல்யாணத்தை நடத்திக் கொடுக்கிறீங்கன்னுட்டான். ஒரே ஒரு உதவி மட்டும் பண்ணுங்க உங்க கட்சிக்காரங்க கிட்டே சொல்லி இப்படி தான் கல்யாணம் நடக்கும். அங்கே வந்து கலாட்டா கூச்சல் வேணாம்னு சொல்லிடுங்க. முடிவை சொல்லிட்டான். கதிர்வேலுவை பேசவே விடலை.

பையன் ஆசைப்பட்டுட்டான். உன் பையன் சேகர் ரொம்ப நல்ல பையன். பேசாமே அவன் ஆசைப்படற பொண்ணைக் கட்டற வேலையைப்பார்.

நண்பர்கள் எல்லோரும் ஒரே மாதிரி சொன்னது சேகர் அப்பாவுக்கு நடைமுறையை உணர்த்தியது.

சேகர் சொன்ன செய்தியை மனைவியிடம் சொன்னார்.

சேகர் அம்மா சந்திராவிற்கு சந்தோஷம் பிடிபடவில்லை. சேகர் அம்மாவிடம் தான் ஆசையை எந்த குழப்பமில்லாமல் சொல்லி இருந்தான். ரொம்ப நல்லதாய்ப் போச்சு, வருகிற ஞாயிறு அன்றே பார்த்து விடலாம். அன்று தான் என் தம்பி ஏதோ வேலையாய் இங்கு வருவதாகச் சொல்லியிருந்தார்.

அவர் தன் கணவரிடம் நாசுக்காக சொல்லி விட்டார்.

“அவர் வீட்டிற்குப் போகும்போது தலைவர், அவர், இவர் என்று உங்கள் ஆட்களைக் கூட்டிப் போக வேண்டாம். எனது தம்பி, பையனுக்கு மாமா அவர் எதேச்சையாக வருகிறார்.

உங்களால் சேர்ந்தாபோல் பத்து நிமிஷம் உங்கள் கொள்கை கலக்காமல் பேசமுடியாது. உங்களால் இந்த வரன் தட்டிப்போனால் பையனுக்கு பதில் சொல்ல முடியாது. பையன் ரொம்ப அப்ஸெட் ஆகிடுவான்.”

“சரி சரி ரொம்ப பேசாதே. நான் பேசாமல் இருந்து விடுகிறேன். நல்ல வேளை உன் தம்பி நடராஜன் வருவது என் வேலையை சுலபமாக்கி விட்டது. எனக்கு என் பையன் கல்யாணம் முடியறது தான் முக்கியம். என் நண்பர் அவர் பையன் BE, MBA எல்லாம் முடிச்சுட்டான். பெண் கிடைக்கிறது ரொம்ப கஷ்டமாக இருக்காம். 3வருஷமாக முயற்சி பண்றாராம். இந்த மாதிரி பெண் கிடைச்சா ஒண்ணுமே பேசாதே முடிச்சுடுன்னு சொல்றார். நல்ல குடும்பத்திலேயிருந்து அதுவும் சாமி கும்பிடுற குடும்பத்து பெண் நல்ல மாதிரி நடந்துப்பா. யோஜனையே பண்ண வேண்டாம்னு சொல்லிட்டார். என்னாலே எந்த பிரச்னையும் வராது நீங்க நிம்மதியா கல்யாணம் முடிவு பண்ணலாம்.”

“ரொம்ப தேங்க்ஸ் அப்பா.”

“உங்களுக்குத் தெரியும். பெண்ணின் அப்பா கோவிலை நம்பிப் பிழைப்பை நடத்துகிறவர். நான் கேள்விப்பட்ட வரையில் அவருக்கு பெருமாள் ஈடுபாடு அதிகம். பெண்ணிற்கு கூட பெருமாளை ரொம்ப பிடிக்குமாம். நம் பையன் ஆசைப்பட்டு விட்டான். அதை மனதில் ஆழமாகத் திடமாக நினைத்துக் கொள்ளுங்கள். முடிந்த வரையில் நீங்கள் பேசாமல் இருந்து என் தம்பியை பேச விடுங்கள். அவன் அழகாகப் பேசி முடித்துவிடுவார்”.

“சரி அப்படியே பண்ணிடறேன்.”

சேகர் உள்ளே வருகிறான்

“நீ எங்கேடா இருந்தே”, சந்திரா கேட்டாள்.

“நான் இப்போ தான் வெளியிலிருந்து வந்து கொண்டிருந்தேன். கல்யாண விஷயமா அம்மா பேசறதைக் கேட்டேன். நான் எப்படி உங்ககிட்ட சொல்றதுன்னுத் தயங்கிக் கொண்டிருந்தேன். அம்மா பக்குவமா சொல்லிட்டாங்க. நீங்க அப்படியேக் கப்புன்னுப் புடிச்சிட்டு அசத்திட்டீங்க.”

“பையன் கல்யாணம்னு சொன்ன உடனே துள்ளுறான் பாரு”.

“இருக்காதா. அவனுக்கும் 24 வயது ஆகிவிட்டது. நீங்க அவன் வயதிலே ஒரு குழந்தைக்கு அப்பா ஆயிட்டீங்க. அது நினைவு இருக்கட்டும்.”

“அது அந்த காலம், இப்போ 30 வயதிற்கு தான் பையன் கல்யாணம் பற்றியே பேசறாங்க தெரியுமா? பையனுக்கு 30 வயதிலே பெண் பார்க்க ஆரம்பிக்கிறாங்க. பொண்ணுங்க 2 வயதிற்கு மேலே வித்தியாசம் கூடாதுன்னு அடம் பிடிக்குதுங்க”

“ஏதோ கல்யாணம்னு பண்ணி முணுக்குன்னு கோபம், ஏன் என்றால் இரண்டு பேருக்கும் இளமை தாண்டி கோபம் வரும் பருவம். அப்புறம், பொண்ணுக்கு டென்ஷன், பையனுக்கு டென்ஷன் குழந்தை பிளானிங் கொஞ்ச வருஷம் கழித்து. அது இதுன்னு சொல்லிட்டு அப்புறம் குழந்தை பிறக்கல்லேன்னு டாக்டர், கோவில் சுத்தறது தான் இப்போ பேஷனாய் போய் விட்டது. சரி நம்ம பேச்சிலே பெண் வீட்டுக்காரங்களுக்கு Phone பண்ண மறந்து போய்விடப் போறோம்”

“நான் அப்பவே ஞாயிற்றுக்கிழமை வர்ரேன்னு போன் பண்ணிட்டேன்”

கோதை வீட்டிலும் இதே சமாச்சாரம் தான்.

“இந்தா பாருங்க பையன் அப்பா ராசநாயகம் கடவுள் இல்லை கட்சியாம். நீங்கள் உங்களுக்குத் தெரிந்த சாமி சமாச்சாரங்களையும், அதிசயங்களையும் சொல்லி அவங்களை போரடிக்காதீங்க. உங்க நண்பர் வேலாயுதத்தை நாளைக்கு வரச்சொல்லுங்க. நான் அவர்கிட்ட பேசி கச்சிதமாய் பேசி முடிக்கச் சொல்லிடறேன். கூடிய வரையில் கேட்டதற்கு மட்டும் பதில் சொல்லிவிட்டு தேவையில்லாமல் பேசாமல் இருந்து விடுங்கள்.” -

மறு நாள் வேலாயுதம் வந்து விட்டார்.

“வணக்கம், அம்மா, ஐயாகிட்ட என்னை கூட்டி வரச் சொன்னீங்கலாம் என்ன விஷயம் அம்மா?”

“ரொம்ப நன்றி சார். நீங்க ஆபிஸிலே வேலை செய்யிறிங்க. நிறைய ஆளுங்களை அதுவும் கட்சிகாரங்க கூட பேசிப்பழகி இருப்பீங்க. இவருக்கு அதெல்லாம் ஒண்ணும் தெரியாது. பூ வாங்குவார், மாலை கட்டுவார். தர்ம கர்த்தா வந்தா எழுந்து நின்னு வணக்கம் சொல்லுவார். காலையிலே மாலை கட்ட தலை குனிஞ்சார்னா, மாலை வரை வியாபாரம் ஆக ஆக மாலை கட்டுவார். அவ்வளவு ஈடுபாடு. சாமி கும்பிடுவார். சாமி பத்தி புத்தகங்கள் படிப்பார். உங்களுக்குத்தான் தெரியுமே, பையனுடைய அப்பா “கடவுள் இல்லை” கட்சிக்காரர். இவருக்கு தெரிஞ்சதெல்லாம் சாமிதான். இவர் பாட்டுக்கு சாமி மகிமை அது இதுன்னு பேசி அதனாலே தகராறு வந்து வரன் தட்டிப் போச்சுன்னா வருத்தம் வரும். பெண்ணுக்கும் பையனைப் பிடிச்சுருக்குன்னு கோடு காட்டிட்டாள். பெத்தவங்க நாம பிள்ளைக்கு எது பிடிக்குமோ அதைச் செய்யணும். நீங்க என்ன சொல்றீங்க.”

“நான் சொல்றதுக்கு என்னம்மா இருக்கு, நீங்க ரொம்ப கரெக்டா தான் சொல்றீங்க. இந்த காலத்திலே குழந்தைங்க விருப்பப்படி பண்ணறது தான் நல்லது. அவங்களுக்கு பிடிக்காத விஷயத்தை நாம அவங்க தலையிலே கட்டி விட்டோம்னா பழைய காலம் மாதிரி அதை ஒத்து கிட்டு போக மாட்டாங்க. பெரிய சிக்கல்லே கொண்டு போய் விட்டுறாங்க.”

“அதனாலே தான் ஸார் நான் உங்களை வரச் சொன்னேன். எங்க ஐயாகிட்ட நான் ஒண்ணும் பேச வேண்டாம்னு சொல்லிட்டேன். நீங்க அவங்க வர சமயத்தில் இங்கு வந்து நீங்களே பக்குவமா பேசி முடிச்சிக் கொடுத்திருங்க. கொஞ்சம் எங்களுக்காகக் கஷ்டப்பட்டு நாங்க பையன் வீடு பார்க்கிற போதும் வந்துடுங்க. கல்யாணம் பேசறப் போதும் வந்துடுங்க. என்ன சார் நான் ஒண்ணு ஒண்ணா சொல்லிக்கிட்டு இருக்கேன். நீங்க உங்க பெண் கல்யாணம் மாதிரி நினைச்சிக்கிட்டு பொண்ணு கல்யாணத்தை முடிச்சிக் கொடுங்க. உங்க வீட்டு அம்மாவையும் கூட்டி வந்திடுங்க. இனிமே இது உங்க வீட்டு கல்யாணம். என்னடா இது, பொறுப்பையெல்லாம் அப்படியே தள்ளி விடறாங்க அப்படி எதுவும் நினைக்காதீங்க, எங்க வீட்டுக்காரருக்கு அவ்வளவு வெளிப் பழக்கம் இல்லை. விவரமும் போதாது. போதாதிற்கு இந்த சம்பந்தம் “ஒரு மாதிரி சிக்கலான சம்பந்தம்” அப்படியாவது பண்ணணுமான்னு கேட்கலாம். அதான் நான் முதல்லேயே சொன்னேனே பையனுக்கும் பெண்ணுக்கும் ஒருத்தரை ஒருத்தர் பிடிச்சுடுத்து”

“சரிம்மா, உங்க ஐயாவை எத்தனை வருஷமாய் எனக்குத் தெரியும் அவரை மாதிரி பொறுமையாய் எத்தனை பேர் இருக்காங்க. அவருடைய நல்ல குணத்திற்கு இந்த கல்யாணம் அவருடைய இஷ்டப்படி நல்லாவே நடக்கும். கோதையையும் எனக்குத் தெரியும். சாமர்த்திய சாலி. எங்கே போனாலும்

சமாளிச்சுடுவாள். நீங்கள் ஒண்ணுத்துக்கும் கவலைப் படாதீர்கள். உங்கள் ஐயா கும்பிடும் பெருமாள் நல்ல வழியா முடிச்சிக் கொடுப்பார்."

"ரொம்ப நன்றி அண்ணே. உங்க வேலாயுதமே முடிச்சுத்தாரேன்னுட்டார். எனக்குக் கவலை விட்டு விட்டது. வந்து ரொம்ப நேரம் ஆச்சு, இன்னொரு காப்பி, மோர், குடிக்கிறீங்களா?"

"வேணாம் அம்மா இப்போ எல்லாம் காப்பி, டீ, அதிகமா குடிக்கிறதில்லை. டாக்டர் முடிந்தால் நிறுத்திடுங்கன்னு சொல்றாரு. நிறுத்துவதா? அது முடியாதுங்கிறதாலே நானே காலையில் ஒண்ணு, மாலையில் ஒண்ணு என்று அளவு பண்ணி வைச்சிருக்கேன். சரி எப்படியோ நடந்தால் சரி. கவலைப்படாதீங்க. எல்லாம் உங்க மனதுக்கும் ஐயா குணத்துக்கும் நல்லபடியாக நடக்கும். சரி நான் வர்ரேம்மா."

"செய்யுங்க அண்ணே."

வேலாயுதம் போனவுடன், "என்ன சாமார்த்தியமாய் பேசி அவரு தலையிலேயே எல்லாத்தையும் கட்டிட்டே?" என்று ஆச்சரியப்பட்டார் கண்ணபிரான்.

"பின்னே நீங்க சொல்லுங்க. நீங்க அந்த பெருமாள் இப்படி பண்ணினார். இந்த பெருமாள் இந்த மாதிரி அதிசயம் செய்தார் என்று சொல்லி அவர் ஏன் அந்த பெருமாள் இதையெல்லாம் கிழிக்கல்லை என்று வம்பு பேசி உங்களுக்கு பொறுமை மீறி எதாவது ஏடாகூடாம சொல்லி அவரு கோபக்காரா இருந்து போய்யா இந்த சம்பந்தம் வேணும்னு போயிட்டார்னா எல்லாருக்கும் கஷ்டம் தானே."

ஃபோன் பேசி ஞாயிற்றுக்கிழமை பையனின் அம்மா, ராசநாயகம், பையனின் மாமா நடராசன், மூணு பேரா

வேண்டாமென்று பையனின் அம்மா பக்கத்து வீட்டு குட்டி பெண்ணை கூப்பிட்டார்.

“இது என்ன புதுசா மூணு பேர் அது இதுன்னு. கார்லே தான் போறோமில்ல. டிரைவர் ஐ கணக்கிலே வைச்சுக்க 4 பேர் ஆகிடுது.” என்று கேட்டார் ராசநாயகம்

“நான் தான் ஆரம்பத்திலேயே சொன்னேனே, கல்யாண முடியிற வரைக்கும் நான் சொல்றதை சும்மா கேட்டு நடங்க. உங்க அபிப்ராயத்தை கேட்டால் மட்டும் சொல்லுங்க. அந்த குட்டி பாப்பா நம் வீட்டிற்கு வந்து நம் கூட விளையடற குழந்தை தானே, அதுவும் ஆசையாக வரும். அவங்க அம்மா கிட்டே பேசிட்டேன்.”

“சரி, நீ சொன்னால் சரி”.

** ** **

“வாங்க; வாங்க; வாய் நிறைய சிரிப்புடன் பெண்ணின் அப்பா, அம்மா வரவேற்றார். பெரிய வீடு இல்லே. கோவில் சன்னதி தெருவில் ஒரத்தில் இருந்தது. நடுவில் 15X10 ல் ஒரு ஹால். இரண்டு சேர்களும் ஒரு சோபாவுடன் இணைந்த படுக்கை ஹாலில் சுவரில் எல்லாம் பெருமாள் படங்கள். ரங்கநாத பெருமாள், திருப்பதி பெருமாள், அவர் சார்ந்திருக்கும் கோவில் விசேஷ உத்ஸவ அலங்காரங்களில் பல திருக்கோலங்களில் பெருமாள். அவர் தாய் தந்தையார் படங்கள் 12 வருஷத்திற்கு முன்பு எடுக்கப்பட்டிருக்கலாம். ஒரு குரூப் ஃபோட்டோ. கோதை எட்டு வயது சிறுமியாய் பூப்போட்ட கவுன் போட்டு அப்பா பக்கத்தில் நின்றுகொண்டிருந்தாள்.

பையனின் அம்மா பூ பழம் வெத்திலை பாக்கு சர்க்கரை என்று பாத்து பாத்து சரியான கெட்டப் பில் வந்திருந்தார். இப்போ

டிவியில் எல்லாம் காண்பிக்கிறார்கள் இப்போதெல்லாம் டிவி தான் நம்ம எல்லா விசேஷங்களுக்கும் மாடல். வழிகாட்டி.

ராசநாயகம் படங்களை ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டு இருக்க சந்திரா பழத்தட்டை அவரிடம் கொடுத்து பெண்ணின் அப்பாவிடம் கொடுக்கச் சொன்னார்.

“இதெல்லாம் என்னங்க?”

“சும்மாதான் வெறுங்கையுடன் வரக்கூடாது. நமது பழக்கம்”

வேலாயுதம் ஆரம்பித்தார்.

“இவர் பெயர் கண்ணபிரான் என்கூட படித்துக் கொண்டிருந்தார். அவர் அப்பா இறந்து விட்டார். அம்மா கோவில் வாசலில் பூ வியாபாரம் செய்து வந்து கொண்டிருந்தார். படிப்பை பாதியில் நிறுத்தி அம்மாவுடன் சேர்ந்து வியாபாரம் ஆரம்பித்து விட்டார். ரொம்பவும் நல்லவர் அவர் பெண்ணையும் நல்லாத் தெரியும். கெட்டிக்காரப் பொண்ணு. ஸ்கூல் முதல் 4 ராங்குக்குள் வந்து விடுவாள். மாநில அளவில் பள்ளிகளுக்குள் நடந்த பேச்சுப்போட்டியில் இரண்டாவது பரிசு பெற்றாள். தமிழில் தொடர் தூர கல்வி திட்டத்தில் B. A பரீட்சை எழுதி இருக்கிறாள் “

“அப்படியா, பொண்ணு எங்கேயிருக்கா?”

“கோதை, வெளியே வாம்மா. பெரியவங்களை கும்பிட்டுக்கோம்மா.”

“வணக்கம் ஐயா..”

“இதென்னடி. நல்லா விழுந்து கும்பிட்டுக்கோடி. நல்லாயிருக்கு இந்த காலத்து பசங்களுக்கு கும்பிட்டுக்கக்கூட சொல்லித் தரணும் போலேருக்கு.”

கோதை நன்றாக விழுந்து வணங்கினாள்.

“நல்லா இரும்மா” என்று சேகரின் அம்மா வாழ்த்தினாள்.

சேகரின் அம்மாவின் மனதில் ஒரே சந்தோஷம். பையன் சரியான பெண்ணைத்தான் தெரிவு செய்து இருக்கிறான். பையனை மனதார பாராட்டினார்

“நான் சேகரின் தாய் மாமன் என் பெயர் நடராஜன். சேகர் இந்தக்காலத்துப் பையன்கள் மாதிரி சினிமா, சிகரெட் குடி எதுவும் இல்லாத பையன். வேலையிலும் சுத்தம். கையும் சுத்தம். அடுத்தவன் காசுக்கு ஆசைப்படவே மாட்டான்.”

“சரிங்க நிச்சயம் பண்ணாமே கை நனைக்கக்கூடாதுன்னு சொல்லுவாங்க, நாங்க கிளம்புறோம். நீங்களும் ஒரு நாள் பார்த்து எங்க வீட்டுக்கு வந்து பாருங்க”

இதுவும் சந்திராவின் டயலாக் தான்.

“ஏன்? புதன் கிழமை நல்லாயிருக்குன்னு போன் பண்ணினீங்களே. அன்றே பார்த்து விடலாம்”

“நானும் வெளியூர் ஒரு வேலையாய் அக்கா வீட்டிற்கு வந்திருகிறேன். வியாழன் வரை இங்கு இருப்பேன். நான் இருக்கும் போது நீங்களும் வந்தால் எனக்கும் சந்தோஷமாயிருக்கும்” என்றார் நடராசன்

“சரி அப்படியே செய்து விட்டால் போகிறது. புதன் கிழமை அன்று நாங்கள் வந்து விடுகிறோம்.” என்று பாலாயி சொல்ல, “சரி கிளம்பலாமா” என்று மனைவியிடம் கேட்டார் ராசநாயகம்.

நடராசன் தன் அக்காவிடம் ஏதோ ரகசியமாய் பேச, பெண்ணின் அப்பா, “ஐயாவுக்கு ஏதோ கேட்கணும் போல தெரியுது. சும்மா கேளுங்கள். எதிலும் தயக்கம் வேண்டாம், கல்யாணம் ஆயிரம்காலத்துப் பயிர்னு சொல்லுவாங்க” என்றார்

அவர் முதல் தடவையாக ஒரு பெரிய டயலாக்கை எடுத்து விட்டார்.

“ஜாதகம் பாத்தீங்களா? எங்க வீட்டிலே ஜாதகம் பாக்கற பழக்கமில்லை. இந்த வீடு சொந்த வீடா, வாடகை வீடானு என் தம்பி கேட்கலாமான்னு கேட்கிறான்” – இது சந்திரா.

“ஜாதகம் பாத்துட்டோம். பையனின் பிறந்த நேரம் வாங்கி ஐயர் கிட்டே கேட்டோம். நல்ல பொருத்தம் இருக்குன்னு சொல்லிட்டாரு. இது வாடகை வீடுதான். ஆனால் சொந்த வீடு மாதிரிதான்” -பாலாயி.

கேள்விக்குறி எல்லார் முகத்திலும் தெளிவாக புரியாததைக் காட்டியது.

“இது கோவில் சொத்து என் மாமனார் காலத்திலேயிருந்து இங்கு இருந்து வருகிறார்கள். நான் கல்யாணம் செய்து வந்த நாளாய் எங்களை யாரும் எதுவும் கேட்டதில்லை. நிறைய பேர் எங்களை கோவிலுக்கு வாடகை கொடுக்காதீங்க. 30 வருஷம் குடியிருந்தா குடியிருந்தவருக்கு சொந்தம்னு சட்டம் இருக்கு. அப்படி இப்படின்னு சொன்னாங்க. ஆனால் இவர் மட்டும் பெருமாள் சொத்து பெரும் நாசம்னு சொல்லிட்டு வாடகை கொடுத்து விடுவார். மூணு வருஷத்துக்கு ஒரு முறை 10% வாடகை ஏத்தியும் கொடுப்பார். வந்த EO எல்லாம் எல்லோரும் கோவில் சொத்தை அனுபவிக்கிறாங்க. எல்லோரும் உங்க வீட்டுக்காரர் மாதிரி இருந்தால் நிர்வாகமும் நல்லாயிருக்கும். கோவிலும் நல்லா நடக்கும்னு சொல்லிட்டு எங்கள் வீட்டிலே காபி சாப்பிட்டுட்டுப் போவாங்க.”

பாலாயி வாய்ப்புக் கிடைத்த போது அதை சரியாக பயன்படுத்தி சம்பந்தம் பேசவந்தவர்களிடம் தன் கணவன் பெருமையைப் பறை சாற்றத் தவறவில்லை.

“அப்படியா? இந்த மாதிரி நல்லவங்களைப் பார்க்கிறது இப்போ அதிசயமாயிருக்கு. எப்போ என்ன எப்படி எது கிடைக்கும் சுருட்டலாம் என்று தேடுகிற காலமாய் போயிருச்சு. அதுவும் கோவில் சொத்துன்னா அப்படியே ஆட்டை போடத் தயாராக இருக்கும் காலம்.” நடராசன் வியந்தார்.

வணக்கம், வணக்கம் – வணக்கங்கள் தாராளமாக பரிமாற விடைபெற்றுக் கொண்டனர். பெண்ணின் குடும்பத்தார் கார் வரை வந்து வழி அனுப்பினார்கள்.

கூட வந்த குட்டிப்பெண், “ஆண்டி எப்போ கல்யாணம்னு பேசவில்லையே?” என்று கார் கிளம்பியவுடன் முதல் கேள்வியாய் கேட்டாள்.

“அவங்க நம்ம வீட்டுக்கு வருவாங்க, அப்புறம் தான் கல்யாணம்.” இப்போல்லாம் இந்தமாதிரி யாரும் நினைக்கிறது கூட இல்லை. மாப்பிளை சரியாகவே சம்பந்தியை தேர்வு செய்து இருக்கிறார்” என்றார் நடராசன்.

அவர் தங்கை இடைமறித்து.”இவரையே ஏன் சொல்றே? போதும் போதும். இவர் ஒண்ணும் பண்ணவில்லை. சேகருக்கு ஒரு அதிர்ஷ்டம். அவனுக்கு தானா தேடிவந்த லட்சுமி. பொண்ணு குடும்பபாங்கா லக்ஷணமா இருக்கா”. என்றாள்.

** **

நாட்கள் துரத்துவது போல் ஒடுகின்றன. புதன் கிழமை திரும்பிப் பார்ப்பதற்குள் வந்து விட்டது.

“வேலாயுதம் சாரை இங்கேயே வரச்சொல்லிடுங்க. நாம வீட்டிலேயிருந்து ஒண்ணா போயிடுவோம்.”

“அவங்க வீட்டிலே வரும்போது ஒரு குட்டி பெண்ணைக் கூட்டி வந்தாங்க. நாமும் பக்கத்து வீட்டுப் பையனைக் கூட்டிப் போகலாமா, அவன்தான் அக்காவுக்கு எப்போக் கல்யாணம்னு அடிக்கடிக் கேட்டுக் கொண்டு இருக்கிறான் “ என்று கேட்டாள் பாலாயி.

“அந்த பெண் ரெம்ப சமர்த்தாய் வாயே திறக்காமல் இருந்தாள். இந்த பையன் படு சுட்டி. எதாவது ஏடாகூடமாய்க் கேட்டு வைப்பான். இல்லை அங்கு போய் விஷமம் செய்து சாமானை எதையாவது உடைத்துக் கிடைத்து வைப்பான்”

“அப்படி எல்லாம் நான் எந்தச் சாமானையும் தொட மாட்டேன். நம் வீட்டுக்கு வந்த வித்யா மாதிரி நானும் உங்களோடு வந்து அக்கா கோதைக்கு வர மாப்பிள்ளையைப் பார்த்து விட்டு வரேன். நேற்று கோதை அக்காக் கூட போய் நீ போய் அவரைப்பார்த்து விட்டு வரீயா, எப்படி இருக்கார்னு நீ சொல்லுன்னு கேட்டா” என சொன்னான் அந்தப் பையன்.

“எல்லாம் சினிமாவுடைய தாக்கம். சினிமாவிலே கதாநாயகிக்கு விவரம் புரியாத இரண்டு விடலைகள், விபரம் புரிந்தும் புரியாதது மாதிரி இரண்டு விடலைகள். காமெடி பண்ணுகிறார்கள். இவள் இந்த பெரிய மனிதனைப் போய் மாப்பிள்ளையைப் பார்த்து வரச் சொல்கிறாள்” கண்ணபிரான் தன் பங்குக்கு அங்கலாய்த்தார்.

“சரி, சரி வந்துட்டு போகட்டும். அவன் வந்தா நாம 4 பேராகப் போகலாம்.” என்று முடிவு கட்டிவிட்டு கார் சொல்லி விட்டீங்களா.” வேலாயுதம் ஸார் எப்போ வருவார்? அவருக்கு முதலில் சொல்லியாச்சா?” எனக் கேட்டாள். பாலாயி

“வேலாயுதம் ஸாருக்கு நான் அவங்க வந்த அன்னிக்கே கேட்டுக்கிட்டேன் அவரும் வரேன்னு சொல்லிட்டாரு நேற்றும் அவரே போன் பண்ணி எத்தனை மணிக்கு வரணும்னு கேட்டாரு. நானும் காலை 11 மணிக்கு வந்துடுங்க. பார்த்துட்டு 1 மணிக்கெல்லாம் திரும்பிடலாம்னு சொல்லிட்டேன். அவரும் 10 மணிக்கு வர்ரேன்னு சொல்லிட்டார். ரொம்ப நல்லது. நான் கொஞ்சம் பழம் எல்லாம் வாங்கி வந்து விடுகிறேன். இன்னிக்கி கோவில்லே விசேஷம். 1 மணிக்கு வந்து பூ கட்டி 4 மணிக்கு கொடுக்க முடியாது. நான் பூமாலையை கட்டி வைக்கச் சொல்கிறேன். நாம் கொஞ்சம் முன்னே பின்னே வந்தாலும் சரி, அது பற்றி ஏதாவது பேசிக்கொண்டிருந்தாலும் பெருமாள் மாலை கொடுப்பதில் பிரச்சினை வராது.”

பையன் காலை 9. 00 மணிக்கே வந்து விட்டான்.

“என்ன அக்கா, நீ வருவியா?”

“போடா, நான் வரமாட்டேன்”

“ஏன் அக்கா?”

“அது அப்படித்தான், பையன் வீட்டைப் பார்ப்பது என்பது வழக்கம். அப்போ பெண் வரமாட்டாள்”

“ஆமாம், நீ தான் மாப்பிள்ளைப் பையனை முன்னமே பார்த்து விட்டாயமே? எல்லோரும் பேசிக்கிறாங்க”

“யார் அப்படி பேசுறது?”

“ஏன், எங்க அம்மா கூட சொல்றாங்க.”

“என்னடா சொன்னங்க”

“கோதை அப்பா அம்மாவுக்கு பையன் புதுசு. அவங்க இப்போ தான் பார்க்கிறாங்க. கோதை ஏற்கனவே பார்த்து பழகிய பையன் தான். அப்படி பேசறாங்க ஏன் அக்கா, லவ்ஸ்ஸா அக்கா?

“போடா, சின்ன பையனா அவங்க கூட போய்ட்டு வா. அனாவசியமா பேசி மாட்டிக்காதே”

“என்ன அக்கா, நீயும் பெரியவங்க மாதிரி பேசறே, நான் என்ன உம்மனா மூஞ்சி மாதிரி போயிட்டு வரணுமா? அப்படினா நான் போகவே இல்லை.”

“சரி சரி நீ எப்படி வேணும்னாலும் போ. மாப்பிள்ளையைப் பார்த்து அவர்கிட்டே நான் விசாரித்ததாகச் சொல்லு”.

வேலாயுதம் ஸார் சரியாக 10. 30 மணிக்கு வந்து விட்டார்.

“ஸார் காப்பி, டீ ஏதாவது, “

“இல்லீங்க அடிக்கடி காபி, டி குடிக்கக் கூடாதுன்னு டாக்டர் சொல்லிட்டார்.”

“சாருக்கு சுக்குக்காபி கொடு உடம்புக்கும் நல்லது”

“கார் வந்துடுத்து மாமா” பையன் குரல் கொடுத்தான்.

ட்ரைவர் பக்கத்து ஸீட்டில் வேலாயுதம் உட்கார்ந்தார்.

கார் மாப்பிள்ளை பையன் வீட்டிற்குப் போய் நின்றது.

“வாங்க, வாங்க”

ராசநாயகம் வாசலில் நின்று வரவேற்றார்.

ஹாலில் அமர்ந்தார்கள். ஹால் ஒரளவுக்கு பெரிது தான். ஒரளவு விலையுயர்ந்த சோபா செட்டுகள் ஆடம்பரத்தையும் செல்வச்செழிப்பையும் பேசின.

ஹாலில் பெரியார் பெரியமாலையுடன் ஆளுயரத்தில் நின்று கொண்டிருந்தார்.

பையன் அவர் படத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"யாரு? உங்க தாத்தாவா? உங்க தாத்தாவுக்கு நீங்க தினமும் மாலை போடுவீங்களா? சாமிக்குத்தான் போடுவாங்க."

பையன் கேட்டான்.

"அவங்க எங்களுக்கு சாமி" என்றார் ராசநாயகம்.

"இந்த சாமியை நான் எந்த கோவிலிலும் பார்க்க வில்லை"

."இந்த சாமி ராமசாமி. சாமிக்கெல்லாம் பெரியசாமி"

"அப்படியா?"

."டேய் சும்மா இருக்கமாட்டே, வந்தமா சமர்த்தா இருந்தமான்னு இருக்கனும். வேண்டாத பேச்செல்லாம் கேட்கக்கூடாது" கடிந்துகொண்டார் வேலாயுதம்.

"அவன் அப்படி என்ன கேட்டு விட்டான். குழந்தைகளை கேள்வி கேட்டா நாம ஊக்குவிக்கணும். அவர்களை கேள்வி கேட்கும் ஆர்வத்தை சின்ன வயதிலேயே கொல்லக்கூடாது. நீ கேளுப்பா"

ராசநாயகம் பையனைத் தட்டிக்கொடுத்துச் சொன்னார்.

பையனின் அம்மா, பெண்ணின் அப்பா, அம்மா, வேலாயுதம் ஸார் எல்லோரும் பேச்சு எங்கோ போய்க் கொண்டிருக்கே. இது எப்படி முடியுமோ, என்னவாகுமோ என்ன நினைத்து எப்படி இதை முடிவுக்கு கொண்டு வருவது என்று திகைத்து ஒருவரை ஒருவர்ப் பார்த்துக்கொண்டு நின்றார்கள்.

அவர் தந்த ஊரக்கமும் தானும் ஏதோ பெரிய விஷயத்தைக் கேட்டு விட்ட மகிழ்ச்சியும் அவனை உற்சாகப்படுத்தின.

“பெரியசாமின்னா எல்லா சாமியைவிடப் பெரியவரா?”

சேகரின் அம்மா தன் கணவர் தன்னுடைய ஒரிஜினல் பார்முக்கு வந்து கொண்டிருப்பதை உணர்ந்தார்.. என்ன செய்வது என்று தெரியாமல் தன் தம்பியைப் பார்த்தார். தம்பியும் அங்கு நெளிந்துகொண்டிருப்பதைப் பார்த்துக் கணவரிடம் கைகளால் சைகை செய்துகொண்டிருந்தார். ராசநாயகம் அதைக் கவனித்தால் தானே. அவர் கவனம் முழுவதுமாகக் குட்டிப்பையனிடம் இருந்தது.

“ஆமாம்”.

“அப்படின்னா முருகன், பெருமாள், சிவன், கிறிஸ்து, நபி, புத்தர் எல்லோரையும் விடவா?”

ராசநாயகம் நெளிந்தார்.

“அப்படியில்லடா தம்பி, அவர் சாமிக்கெல்லாம் பூ, பண்டிகை எல்லாம் அனாவசியமாய் சிலவு செய்யக்கூடாது என்று பிரச்சாரம் செய்தார்”

“அவருக்கு ஏன் தினமும் மாலை? அவர் தான் யாருக்கும் மாலை வேண்டாம் என்று சொன்னாரே”

“ஆண்ட்டி, கொஞ்சம் லேட்டாகிடுத்து.” அந்த வீட்டுக்குள் ஒரு பெண் ஓடி வந்தாள்.

அந்தப் பையனைப் பார்த்து, “டேய்.. சேகர் நீ எங்கடா இங்கே?” என வியந்தாள்

“வித்யா நீ எப்படி இருக்கே, நான் எங்க அக்காவுக்கு மாப்பிள்ளை பார்க்க வந்திருக்கேன்”

“அப்படியா நான் பெண் வீட்டுக்கு வந்திருந்தேனே. நீ எங்கே அப்போக் காணோம்.”

“அக்கா சொன்னாங்க நான் அப்போ ஊர்லே இல்லை”

“ ஆண்ட்டி, இவ வித்யா, என்கூடப் படிக்கிறவ. நாங்க இரண்டு பேரும் திக் ஃபிரண்ட்ஸ்”

“அதான் தெரிகிறதே “தம்பி” வேலாயுதம் அதை முடித்து வைத்தார்.

ராசநாயகம் எதோ சொல்ல எத்தனித்தார்.. அவன் யார் சொல்வதையும் கேட்கும் மூடில் இல்லை.

“பெரியவங்க பேசட்டும். நாம வாசலுக்கு போய் விளையாடலாம்.”

வித்யாவும் குட்டி சேகரும் வெளியில் போனார்கள்.

பெண்ணின் அப்பா, அம்மா, பையனின் அம்மா. வேலாயுதம், நடராசன் எல்லார் முகத்திலும் ஒரு பெரிய ரிலீப் தெரிந்தது.

“இந்த வீடு நானே பார்த்து பார்த்துக் கட்டியது. மேலே மாடி கட்ட வேண்டும் என்று எண்ணியே கீழே பவுண்டேஷன் ஸ்ட்ராங் ஆக போட்டிருக்கேன். கல்யாணம் பேசினவுடனையே மேலே ரூம் எல்லாம் கட்டடலாம்னு இருக்கேன்”

“நீங்க இரண்டு பேரும் இந்த கல்யாணத்திலே ஆர்வமா இருக்கீங்க. பக்கத்திலேயே முகூர்த்த நாள் நிறையவே இருக்கு. ஒரு நாள் பார்த்து கல்யாணம் செய்திடலாம்” என்று சொன்னார் வேலாயுதம்.

“முன்னெல்லாம் கல்யாணத்துக்கு முன்னால் ஒப்புதாம்பூலம் செய்வாங்க” நடராசன் மெதுவாக ஆரம்பித்தார்.

“இல்லீங்க. அது சரியாக வராது. கோதையின் சித்திக்கு உடல்நிலை சரியில்லாமல் இருப்பதாலும் அவர்கள் குணமாகி வீடு திரும்ப இரண்டு மாதங்கள் ஆகிவிடும் என்று டாக்டர்கள் சொல்லி இருப்பதால் இரண்டு மாதங்களுக்கு மேலே திருமணத்தை வைத்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்தார்கள். பெண்ணும் தையல் படித்துக்கொண்டிருக்கிறாள். அது முடிய இரண்டு மாதங்கள் இருக்கு. அது முடிந்தவுடன் கல்யாணம் வைத்துக் கொள்ளலாம்.”

“இப்போ உங்க வசதி பார்த்து ஒப்புதாம்பூலம் வைத்துக் கொள்ளலாம்.” நடராசன் தீர்மானமாகச் சொல்லி விட்டார்.

“மேலும் இப்போதுள்ள வழக்கப்படி உங்கள் விருப்பம் அதுவானால் அப்படியே பண்ணிடலாம். ஒப்புதாம்பூலம் பாதிகல்யாணம்னு ஆகிடுத்து. அது ஒரு பெரிய Function ஆக செய்ய ஆரம்பித்து விட்டார்கள்” என்றார் கண்ணபிரான்.

“நாளைக்கு பையன் தனக்கு அந்த மாதிரி செய்ய வில்லையே என்று எண்ணக்கூடாது.” இது நடராசன்.

சேகர் மெதுவாக பேச ஆரம்பித்தான்

“அப்பா ஒப்புதாம்பூலம் போன்ற சடங்குகளால் நம் குடும்பத்திற்கும் அவர்கள் குடும்பத்திற்கும் தேவையற்ற செலவு ஏற்படும். நான் ஒன்றும் எனக்கு ஏன் ஒப்புதாம்பூலம் நடத்தவில்லை என்று யாரிடமும் சண்டை போடப் போவதில்லை. என் பெயரைச் சொல்லி அதனால் ஒரு தேவையற்ற சடங்கும் அதைக் கூட்டி செலவும் ஏற்படுமானால் அது வேண்டாம். தேவையற்றது.”

“இந்த சேகரை பாருப்பா. இப்போது அதாவது கல்யாணம் பேசின உடனேயே பெண் வீட்டு செலவை குறைக்க வழி வகுக்கிறான். ஆனால் அதுவும் நல்லதுதான். இளைஞர்கள் இது

மாதிரி நல்ல முறையில் யோசிக்கவேண்டும்." நடராசன் சேகரை விஷேமாகச் சித்தரிக்க ஆரம்பித்தார். "நண்பர் சொல்கிறபடி தையல் படிப்பு இரண்டு மாதங்கள் இருக்குது. இப்போதெல்லாம் சத்திரம் பார்த்து கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்வதற்கு மாதங்களாகின்றன. ஆமாம். பணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். மண்டபம் தேடி அலைய வேண்டும். மண்டபம் நமக்கு ஏற்றபடி அமைய வேண்டும். பத்திரிகை அடிக்க வேண்டும்."

ஒப்புதாம்பூலம் இல்லாமல் நேராக கல்யாணம் செய்வது என்றும் அந்தக் கல்யாணம் இரண்டு மாதங்கள் கழித்து அதாவது பெண்ணிற்கு பரீட்சை முடிந்த பின்பு இரு குடும்பத்திற்கும் வசதியான ஒரு முகூர்த்த நாளில் திருமணம் செய்வதாக முடிவு செய்யப்பட்டது.

"திருமணம் பேசும்போதே இந்த போட்டோவை கழற்றி வைக்க சொன்னேன். நீங்க கேக்கவில்லை அன்று அவர்கள் வீட்டில் வந்திருந்தபோது என்ன ஆயிற்று? உங்கள் மூடுக்கு வந்து கொண்டிருந்தீங்க. நல்ல வேளையாக வித்யா பொண்ணு வந்து காப்பாத்தினாள். நீங்கள் எதாவது ஏடாகூடமாகப் பேசி சம்பந்திக்கு கோவம் வராமல் நல்லபடியாய் முடிய நான் தவித்த தவிப்பு உங்களுக்கு தெரியாது." விசனப்பட்டாள் சந்திரா.

"ஏன் அவங்களுக்கே நம்ம குடும்பம் கடவுள் இல்லை கட்சின்னு தெரியுமே?" ராசநாயகம் இடைமறித்தார்.

"கட்சியின் பொது உறுப்பினர் விசுவாசி தீவிர உறுப்பினர் செயல் வீரர் எவ்வளவோ இருக்கு. நீங்கள் எப்படி என்று இப்போது தெரியவேண்டாம் "

** **

கோதை தற்செயலாக மார்க்கெட்டில் சேகரை சந்தித்தாள்.

“என்ன எப்படி இருக்கே?”

“நல்லாயிருக்கேன். நீங்க எப்படி இருக்கீங்க? “

“அந்த பையன் யாரு?”

“யாரை கேக்கிறீங்க?”

“அதான் உங்கப்பா எங்க வீட்டுக்கு வரும்போது கூட்டி வந்தாரே அந்த பையன் அவன் பெயர் என்ன?”

“உண்மையிலேயே ஞாபகம் இல்லையா?”

“ஏன் அப்படி கேட்கிறே?”

“உங்க பெயர்தான் அவனுக்கும், அப்பா கூட சேகர்னு பெயர் வைத்தாலே கொஞ்சம் துடிப்பாகத்தான் இருப்பாங்க போல் இருக்குன்னு சொல்லி என்னை கலாய்த்தார்.”

“ரொம்ப டென்ஷனாக்கி விட்டான். என் அப்பா தன்னை மறப்பதற்கு உள்ள சூழ்நிலையை உண்டாக்கிவிட்டான். நல்லவேளை அந்தப் பொண்ணு வந்து காப்பாற்றினாள்.”

“அவள் நல்ல பையன். இரண்டு வீடு தள்ளி இருக்கான். அடிக்கடி பாடம் கேட்க வருவான். பல சமயம் அவன் கேள்விக்கு எனக்கும் பதில் தெரியாது. நான் முழிப்பதைப் பார்த்து “அக்கா தெரியாவிட்டால் யோசிச்சு பின்னாலே சொல்லுங்கன்னு சொல்லுவான். நாளை வருகிறேன்னு சொல்லி ஓடிப்போவான். ரொம்ப புத்திசாலி பையன். அவன் அப்பாகிட்ட நான் சொல்லுவேன். உங்க பையன் சராசரியை விட அதிக ‘IQ’ உள்ளவன். அவனுக்கு ஸ்பெஷல் கோச்சிங் எதாவது கொடுங்க என்பேன்.”

“அவங்க அப்பா எல்லா குழந்தைகளுக்குமே புதியதாய் தெரிந்து கொள்ள ஆர்வம் இருக்கும். இதில் புதிது ஒன்றும் கிடையாதுன்னு என்னை அடக்கிவிடுவார்.”

“இதே மாதிரி பையன் வெளிநாட்டில் இருந்தால் அவனை அப்படி இப்படின்னு பேப்பரிலே போட்டு அட்டகாசம் பண்ணிடுவாங்க.”

“சரி விடு. அவன் புராணம் போதும், எப்போக் கல்யாணம் வைத்திருக்காங்க?. எங்கே பண்ணப் போறார்?.”

“அப்பா கோவில் ட்ரஸ்டி கிட்ட மண்டபம் கேட்டிருக்கார். கோவில் திருவிழா அடுத்த வாரம் வருகிறது. விழா முடிந்தவுடன் பார்க்கலாம்னு சொன்னார். அய்யர்கிட்ட நாள் குறிக்கச் சொல்லி அப்பா நேற்றுதான் போனார். நாளை வரச் சொல்லியிருக்கிறார். இன்னும் 10 நாளுக்குள் முடுஞ்சுடும்னு நினைக்கிறேன்”

“அப்புறம்”

“அப்புறம், நீங்க தான் சொல்லனும் உங்க வீட்டிலே இருந்து எவ்வளவு பேர் வருவாங்க. உங்க அப்பா கட்சிக்காரங்க எல்லாம் வருவாங்களா? அவங்க கோவில் மண்டபத்திலே குடிக்காமா எந்த கலாட்டாவும் பண்ணாம நல்லபடியா நடக்கணும்னு கொஞ்சம் கவலையாயிருக்கு. நான் கூட அப்பா கிட்ட வேறே எங்காவது வைச்சுக்கலாம்னு சொன்னேன் அப்பாவும் நானும் விசாரிச்சேன் அரை நாள் ஃபசஷனுக்கே 10000வரை கேட்கிறாங்க. ஆயிரத்தெட்டு கண்டிஷன் வேறு. பேனர், அலங்காரம் எல்லாம் அவங்க சொல்ற ஆள்தான். தண்ணிக்கு தனி காசு. சமையல் கூடாது. வெளியிலிருந்து Catering. கோவில் மண்டபம்னா இடம்

பெரியது. ரொம்ப சீப்பாக முடித்து விடலாம். அப்பா அபிப்பிராயப்படுகிறார்."

"செலவையும் பார்க்க வேண்டியதுதானே எங்கப்பா கூட அனாவசியமா யாராவது செலவு செய்தால் விரும்ப மாட்டார். எங்கப்பாவும் கூட அவர் கட்சிக்கார நண்பர்கள் கிட்ட அப்பா என் பையன் கடவுளையே நம்பி கோவில்லே குடியிருக்கிற குடும்பத்திலே பெண் செலக்ட் பண்ணிட்டான். பொண்ணும் கெட்டிகாரப் பொண்ணு. விசாரிச்சுட்டேன். நீங்கள் வந்துட்டு அது இதுன்னு ஒண்ணும்சொல்ல வேண்டாம். நம்ம ஆட்கள் வரதும் தெரியப்படாது. போறதும் தெரியப்படாது. எல்லோரும் கட்சி ஆஃபீசிலே இருங்க. கோவில் மண்டபத்திலிருந்து ரொம்ப தூரம் இல்லை. நான் முஹூர்த்தம் முடிந்த கையோடு போன் பண்ணறேன். வரீங்க, மொய் எழுதுறீங்க சாப்பிடுறீங்க போறீங்க. நீங்க அப்படி செஞ்சா எனக்கு பெரிய உதவி. முக்கியமா யாராவது குடித்திடிருந்தால் அவங்க ஆஃபீசிலே இருக்கட்டும். பார்சல் வாங்கிப் போய்டுங்க. அப்படி பேசிக்கிட்டிருந்தார்."

"அடே அப்பா ரொம்ப விவரமான ஆளு போலே இருக்கே இவருகிட்டே நான் சரியா மாட்டிப்பேன்னு நினைக்கிறேன்"

"அதெல்லாம் ஒன்னும் இல்லை. நீ பயப்படத் தேவை இல்லை. அம்மா உன்னைத் தான் பாத்துக்கிறேன்னு சொல்லச் சொன்னாங்க "

அம்மா கொடுத்த கதை வசனம்

"அப்படியா?"

"நீ ஒண்ணும் கவலைப்பட வேண்டாம், எல்லாம் நல்லபடியாய் நடக்கும். சரி, வா ஐஸ் சாப்பிட்டுவிட்டு வரலாம். அந்த கடைக்காரனை உனக்குக் கூட தெரியும்."

“எனக்கா, அப்படி யாரையும் தெரியாது”

“பார்த்தால் புரியும். அன்னிக்கு சைக்கிள் ரிப்பேர் ஆன போது என் கூட இருந்தானே நான் ‘ஹெல்ப்’ பண்ணி ஒரு கடையில் கொடுத்தேனே?”

“அப்படியா,“

“அவன் என் கூடப் படிச்சான். படிச்சு முடிச்சவுடன் அவன் அப்பா கடையை எடுத்து ஜூஸ், சிப்ஸ், வியாபாரம் பண்ணி நல்லாயிருக்கான்.”

“குமார் ஜூஸ் இரண்டு”

“டேய் சேகர்”

“என்னடா ஒன்னை ரொம்ப நாளக் காணோம்?”

“அப்பாவுக்கு உடம்பு சரியாக இல்லை. கடையை நானே முழுநேரம் கவனிச்சுக்க வேண்டியிருக்கு. மீதி நேரம் அப்பாவை டாக்டரு கிட்ட கூட்டிப் போக அவரை ஃபிசியோ தெரபிக்கு கூட்டிப் போக சரியாக இருக்கு. நானும் எங்கேயும் போறதில்லை.”

“சரி இந்த பொண்ணைப் பாரு, யாரு தெரியறதா?”

“தெரியலை”,

“டேய், ஒரு நாள் சைக்கிள் ‘பிராப்ளம்’னு ரோட்டிலே நாம இரண்டு சைக்கிளை எடுத்து வந்தோமே, ஞாபகம் இருக்கா?”

“ஆமாம், ஞாபகம் வந்திருச்சு. அது நடந்து 6 மாதத்திற்கு மேலே ஆகுதுன்னு நினைக்கிறேன். அதுக்கு இப்போ என்ன?”

“அந்த பெண் தான் இவ. இவளை நான் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறேன்”

“அட்றா சக்கை, இவங்க கூட இன்னொரு பெண் வந்தாங்களே. அவங்க என்ன ஆனாங்க.”

“ஏன் நீ பார்க்கலாம்னு பார்க்கிறீயா.”

“இப்போ எனக்கு அதைப்பத்தி எல்லாம் நினைக்க நேரமில்லை. எனக்கு சொல்லவே இல்லை”

“நாம தான் பார்த்து எவ்வளவு நாளாயிடுத்து. இந்த வாரம் தான் பெரியவங்க பேசி முடிவு பண்ணினாங்க”

.”வெரிகுட். உனக்கு நான் ஜூஸ் தர்ரேன் ஜூஸ்ஸுக்கு காசு தரவேண்டாம். வாழ்த்துக்கள். உன் கல்யாணத்திற்கு ஜூஸ், ஐஸ்க்ரீம் வாங்கினா என் சப்ளை தான்.”

“சரி டா. பை, “

“நாங்க ஃபிரண்ட்ஸ் கூட ஜூஸ் குடிச்சா இங்க வந்து தான் குடிப்போம். ரொம்ப டீஸண்ட். என் ஃபிரண்ட்ஸ் எல்லாம் ஒரே மாதிரிதான். நாங்க அடுத்தவங்க விஷயத்திலே அனாவசியமா தலையிடமாட்டோம். இன்னொண்ணு தெரியுமா, இவன் தீவிர முருக பக்தன். தை கிருத்திகைக்கு பழனிக்கு நடந்தே போவான். நானே கேலி பண்ணிருக்கேன். இது என்னடா வேலையத்த வேலைன்னு.”

“என்னைப் போய் முருகனா, நீயான்னு கேட்டா முருகன் தான் கனவில் கூட அடிச்சு சொல்லிடுவேன். வள்ளலார், ரமணர் போன்ற மகான்கள் எவ்வளவு பெரியவர்கள். அவர்களால் நாட்டுக்கு எவ்வளவு பெருமை விவேகாநந்தரிடம் இல்லாத அறிவா உங்கள் தலைவர்களிடம் இருக்கு? ஒன்று நிறைய படித்து அதில் பெரிய ஆராய்ச்சி பண்ணி இருக்கவேண்டும். இல்லை அது பற்றி வாழ்ந்து அனுபவித்து கருத்து சொல்லவேண்டும். இராமகிருஷ்ணர்

பண்ணாத ஆராய்ச்சியா? ஒவ்வொரு மதத்தையும் ஆராய்ந்தார் " என்று செமையா பேசுவான்.

"அவனுடன் பேசுவது ரொம்ப கஷ்டம்.. ஒரு தடவை என் அப்பா அவனைப் பார்த்து விட்டார். அவன் பழனியாத்திரைக்கு தயாராகிக் கொண்டிருந்தான். பச்சை வேட்டி, பச்சை சட்டை, துளசி மாலை, எங்க வீட்டிற்கு வந்து பழனிக்கு அவசரமாய் நண்பருடன் போவதால் இரண்டு நாள் கடையைப் பார்த்து கொள்ள முடியுமா என்று கேட்க வந்திருந்தான்

என் அப்பாவும் நண்பர்களும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"என்னப்பா, இது என்ன கோலம்."

நையாண்டியோடு அவர் விசாரணை ஆரம்பித்தார்.

என் நண்பனுக்கும் என் அப்பா பற்றி தெரியும்.

"சும்மா, பழனி வரைக்கும் ரோடு சரியாக இருக்கா, குண்டு குழியா இருக்கான்னு ஒரு சர்வே பண்ணி பொது நலச்சேவை செய்யலாம் என்று நண்பர்களுடன் போகலாம் என்றிருக்கிறேன்."

"அப்படி என்றால் பரவாயில்லை. என் பையன் நீ என்னவோ பழனிக்கு முருகனைத் தேடிக்கொண்டு போறேன்னான். ஏண்டா இங்கே உள்ள முருகன் என்ன ஆனார் என்று கேட்டுக்கொண்டு இருந்தேன்" -என் அப்பா விதண்டாவாதம் செய்தார்.

"அதுவும் ஒரு விதத்தில் உண்மைதான் முருகன் எல்லா இடத்திலேயும் ஒவ்வொரு விதத்தில் ஒவ்வொரு விதமாக காட்சியளிப்பதாகச் சொல்கிறார்கள். உங்கள் பையன் சேகரையே எடுத்துக்கொள்ளுங்கள். அவனை எலெக்ட்ரிக் அலுவகத்திலே ஒரு மாதிரி சீருடை அணிந்து இருக்கிறான் உங்க கூட கட்சிக்கு வரும்போது வேறு மாதிரி உடை அணிந்து இருக்கான் எங்க மாதிரி நண்பர்களோடு சினிமாவுக்கு போறபோது வேறே மாதிரி டிரஸ்

அவனை எந்த ட்ரெஸ்ஸில் பார்க்க ஆசைப்படுகிறோமோ அந்த சுற்றலில் பார்க்க வேண்டும். முருகன் கோபம் கொண்டு ஒரு இடத்தில இருக்கிறார். திருமணம் புரிந்து ஒரு இடத்தில் இருக்கிறார். அறிவுக்களஞ்சியமாக தந்தைக்கு பொருள் சொல்லி ஒரு இடத்தில் இருக்கிறார்.. கோபம் கொண்டு பழனியில் ஆண்டியாக நிற்கும் கோலத்தை பார்க்க ஆசைப்படுகிறேன். அங்கு தான் அதை காண முடியும் அதனால் அங்கு போகிறேன்."

"சேகர் உன் நண்பன் உஷாராகவே இருக்கான். நல்லாவும் பேசுறான்" என் அப்பாவே அவனை பாராட்டி பேசுவார்".

** ** **

நாட்கள் எப்படி ஓடின என்றே தெரியவில்லை. திருமணம் கண்ணபிரான் ஆசைப்பட்டபடியே கோவில் திருமணமண்டபத்தில் சிறப்பாக நடந்தேறியது. கோவில் ட்ரஸ்ட்டிகள், கோவில் அர்ச்சகர்கள், கோவில் சிப்பந்திகள் எல்லோரும் வந்திருந்தார்கள். கட்சிக்காரங்கள் குறைந்த அளவிலே வந்திருந்தனர். சேகர் அலுவகத்திலிருந்து அதிகாரிகள் நண்பர்கள் வந்திருந்தார்கள்.

திருமணத்தின் பொது எந்தவித அசம்பாவிதமும் இன்றி கண்ணபிரான் எதிர்பார்த்த மாதிரியே திருமணம் சிறப்பாகவே நடந்தேறியது. கண்ணபிரான் நேர்மை, கடினஉழைப்பு வந்திருந்த எல்லா விருந்தினர்களின் பாராட்டைப் பெற்றது அவர் கட்சிக்காரர்கள்கூட அவருடைய நல்ல குணத்தைப் பாராட்டிவிட்டு, ராசநாயகத்திடம் "நீ நல்ல சம்பந்தியை பெற்றுவிட்டே" என்று பாராட்டினார்கள்.

கண்ணபிரான் பெருமாளிடம் "பெருமாளே உன் கருணையை என்ன சொல்வது எனக்கு எந்த விதத்திலும் சிக்கல் ஏற்படுத்தாத வண்ணம் திருமணத்தை சிறப்பாக நடத்திக் கொடுத்து விட்டாய். இதற்கு நான் என்ன கைமாறு செய்ய முடியும் அகில உலகத்தைப் படைத்து அதில் ஒவ்வொரு ஜீவராசியின் உயிரையும் காத்து

ஒவ்வொருவருக்கும் வாழவழி செய்து வைக்கும் என் தெய்வமே. நான் என் கடைசி மூச்சு உள்ளவரை உன் திருக்கோவிலில் ஏதாவது தொண்டு செய்து கொண்டு வாழ வேண்டும் இதைத்தவிர வேறொன்றும் எனக்கு வேண்டாம்" என்று பிரார்த்தித்தார்.

கோதைக்கு மிகவும் சந்தோஷம். ஏன்? சேகருக்கும் தான். அவர்கள் திருமணத்தன்று ஏதோ உலக கல்வியாளர் என்று உலக கல்விக் கழகத்தினால் அறிவிக்கப்பட்டு இந்திய அரசாங்கம் அந்த உலக கல்வியாளர் நாளை கொண்டாடும் வகையிலும் அதற்கு மரியாதை சேர்க்கும் வகையிலும் எல்லா சாராயக் கடைகளையும் மதுபான கடைகளையும் மூடி விட அறிக்கை விட்டார்கள். தமிழ்நாடு அரசும் அந்த அறிக்கையை மதித்து எல்லா சாராயக் கடைகளையும் மதுபான கடைகளையும் மூடி விட்டார்கள். இது ஏதோ தற்செயலாக நடந்தது, ஆனால் திருமணத்திற்கு பெருமளவு உதவி செய்தது. யாரும் எதிர்பார்க்காத இந்த இந்த மது விற்பனை தடையால் யாரும் முன்கூட்டியே வேண்டிய சாராய பாட்டில்களையும் மதுபானங்களையும் தேவையான அளவு வாங்கி வைத்துக் கொள்ளவில்லை. அதனால் குடிமகன்களுக்கு சாராயமோ மதுபானமும் கல்யாணதினத்தில் கிடைக்கவில்லை.

ராசநாயகத்திற்கு இந்த விஷயம் இது மிகவும் சந்தோஷத்தை கொடுத்தது. யாரும் குடித்து விட்டு வர மாட்டார்கள். இதனால் எந்த கலாட்டாவும் திருமணத்தில் வருவதற்கு வாய்ப்பே இல்லை.

கண்ணபிரான் தன் மனைவியிடம், "பார்த்தியா பெருமாள் என்ன மாதிரி செய்து விட்டார்? சம்பந்தி யாராவது சாராயம் குடித்துவிட்டு கலாட்டா செய்வார்கள் என்று பயந்து கொண்டிருந்தார் இப்பொழுது சாராயமே கிடைக்கவில்லை. எல்லாம் பெருமாள் செயல்" என்று பெருமைப் பட்டுக் கொண்டிருந்தார்.

அவர் மனைவியோ, “இந்த பெருமையை தயவுசெய்து உங்களுடன் நிறுத்திக் கொள்ளுங்கள். யாரிடமும் இதை சொல்லி அதனால் ஏதாவது வம்பு வர வாய்ப்புக்கள் உண்டு” என்றார்.

அவரும் அதிலுள்ள நியாயத்தை எடுத்துக் கொண்டு மௌனம் காத்தார். ஒரே வாழ்த்துக்களும் நன்றிகளும் அந்த திருமண மண்டபத்தை நிறப்ப, ராசநாயகம் கண்ணபிரான் இடம், “ஐயா இதுதான் நான் பார்க்கும் முதல் முறையான திருமணம். இதிலும் ஒரு மகிழ்ச்சி இருப்பதை நான் உணர்ந்து கொண்டேன். எங்கள் சுயமரியாதை கல்யாணத்தில் தலைவர் பேசுவார். அனேகமாக அரசியலைப் பேசுவார். எதிர் கட்சியைத் திட்டுவார். இறுதியாக கையில் மாலையைக் கொடுத்துத் தெரிந்தால் ஒரு திருக்குறளைச் சொல்லி வாழ்த்தி விட்டு சென்று விடுவார். ஏதோ திருமணம் பதிவுத்திருமணம் மாதிரி விரைவில் ஓடிவிடும். ஆனால் உங்கள் திருமண நிகழ்ச்சி மணமக்களுக்கு பல நிகழ்ச்சிகளை பின் நினைவு கூறும் வகையில் இருப்பது மணமக்களுக்கு உண்மையாக சந்தோஷத்தை வழங்கும். எப்போது வேண்டுமானாலும் அந்த பழைய நிகழ்ச்சிகளை அசை போடலாம். வீடியோ எடுத்து இருந்தால் அதை பார்த்து தன் மக்களுக்குச் சொல்லலாம். என் மகனுக்கு இந்த மாதிரி திருமணம் நடத்திக் கொடுத்த உங்களுக்கு நன்றி.” என்றார்

பெண் வீட்டில் எல்லோருக்கும் சந்தோஷம்.

வேலாயுதம் சாருக்கு சந்தோஷம் இரட்டிப்பாக இருந்தது. தன் நண்பர் மகளுக்கு கல்யாணம். மாப்பிளை தன்னுடன் வேலை செய்யும் ஒரு டெக்னிஷியன்.

பெண்ணை மாப்பிள்ளை வீட்டில் கொண்டுவிடும் நிகழ்ச்சி வந்தது

கண்ணபிரான் இபி சாரிடம், “சார் இதுவரையில் கல்யாணத்தை நல்ல முறையில் நடத்திக் கொடுத்து விட்டீர்கள்.

இறுதி பகுதியான பெண்ணை மாப்பிள்ளை வீட்டில் கொண்டு விடும் சடங்கையும் நீங்களே உங்கள் மனைவியுடன் சென்று முடித்து விடுங்கள்.” என்று கேட்டார்.

“இல்லை இல்லை. பெண்ணுக்கு அப்பாவும் அம்மாவும் செல்வதுதான் முறை.” என்று வேலாயுதம் சார் சொன்னார்

“முறையை விடுங்கள். ஐயா எனக்கு இங்கு கொடுக்கல் வாங்கல் நிறைய இருக்கிறது. எனக்கு இருப்பது ஒரே பெண். எனக்கு வேறு மகன் இருந்தால் அவனிடம் இதைப் பார்த்துக்ககொள்ளச் சொல்லி நான் சென்று வரலாம்.”

இவர்கள் இவ்வாறு விவாதித்துக் கொண்டிருக்கும் பொழுது கண்ணபிரான் மனைவி அங்கு வந்தார்

“நான் இபி சாரிடம் அவர் மனைவியுடன் பெண்ணை அழைத்துக் கொண்டு வீட்டில் மாப்பிள்ளை வீட்டில் எனக்கு பதிலாக விட்டு விட்டு வரச் சொல்லுகிறேன். அதற்கு அவர் நாம் செல்வது தான் முறை” என்று விவாதிக்கிறார்.

மனைவி “ஐயா ஒரே ஒரு நிமிடம். இங்கே வாருங்கள்” என்று அருகில் அழைத்து, “ஐயா புரிந்துகொள்ளுங்கள். என் கணவர் மூச்சுக்கு மூன்று தடவை பெருமாள் பெருமாள் என்று சொல்லுவார். பெருமானின் பெருமையை சொல்லுவார். அவர் அப்படியே பழகி விட்டார். அப்படி சொல்லாமல் இருக்க அவரால் அவரை திடீரென்று மாற்றிக்கொள்ள முடியாது. சம்பந்தி எப்படி என்று நமக்கும் தெரியாது. இவர் போய் அதாவது ஏதாவது ஏடாகூடமாகப் பேசி இதுவரையில் நன்றாக நடந்த விஷயம் கெட்டுவிடக் கூடாது. அவரை உங்களிடம் கேட்கச் சொன்னதே நான்தான். இதுதான் உண்மையான காரணம். உங்களுக்கு பலருடன் பேசி பழகி பழக்கம் இருக்கிறது. இவருக்கு பெருமாளை தவிர வேறு எதுவுமே தெரியாது.” விளக்கினாள்

ஈபி சார் சிரித்துக்கொண்டே "சரிம்மா நீங்கள் சொல்லும் காரணம் எனக்கு புரிந்துவிட்டது. நானும் என் மனைவியும் மகளை அழைத்துக் கொண்டு செல்வதை எங்களுக்கு கிடைத்த பெருமையாக எடுத்துக் கொள்கிறோம்." வேனில் எல்லோரும் ஏறிக் கொண்டார்கள்.

கிளம்புவதற்கு முன்பு கோதை சேகரிடம், "நீங்கள் கோவிலுக்கு வர வேண்டாம். அதைச் சொல்லி உங்களை சங்கடபடுத்த விரும்பவில்லை. ஆனாலும் எனது தந்தையும் தாயும் பெருமாள் படத்திற்கு முன்பு நிற்பார்கள். நீங்களும் நானும் விழுந்து வணங்குகிறோம். பெருமாளிடம் அவரை வணங்கியதாக எடுத்துக் கொள்ளும்படி சொல்லி விடுகிறேன்." என்றாள்

இதில் ஒன்றும் எனக்கு கஷ்டம் இல்லை. அவரை அவருடைய தாய் தந்தையர்கள் பெருமாள் படத்திற்கு முன் நின்றார்கள். கோதை ஈபி சாரையும் அவருடைய மனைவியும் நிற்கச் சொன்னாள்.

"நான் எதற்கு?" வேலாயுதம் கேட்டார்.

இதற்கு அம்மா சொன்னார் "என்ன சார் இப்படி சொல்லிட்டீங்க திருமணம் நன்றாக நடந்தது என்றால் அதில் உங்கள் பங்கு அதிகம்".

"ஆமாம். அவருடைய பங்கு பெரியதுதான்" சேகர் சொன்னான்.

"மாப்பிள்ளையே சொல்லிவிட்டார். எல்லோரும் நில்லுங்கள். நாங்கள் வணங்குகிறோம்" என்று கோதை சொல்லி எல்லோரையும் மாப்பிளையுடன் விழுந்து வணங்கினாள்.

கல்யாணம் முடிந்து சேகர் சேகர் வீட்டிற்கு பாலாயி, கண்ணபிரான் ஏற்பாட்டின்படி வேலாயுதம், அவர் மனைவி இருவருடன் கோதை கிளம்பினாள்.

பாலாயி, "அப்பாவுக்கு உள்ள வேலை உனக்கு தெரியும். அவருக்கு வருஷம் முழுவதும் வேலை. நாங்கள் உன்னை பார்க்க வரவில்லையே என்று நினைக்காதே. என் நினைப்பு, உன் அப்பாவின் நினைப்பு, எங்கள் உயிர் எல்லாம் நீதான். உள்ளூரிலேயே இருந்தாலும் நாங்கள் பார்க்க வராததும் பெருமாளின் திருவிளையாடல் என்று எடுத்துக்கொள். அப்பா அங்கு வந்து பெருமாள் புராணம் படிக்க உன் மாமன் உன் மாமனார் எதிர்பாட்டு பாட வாய்ப்பேச்சு முற்றி சண்டையாக வெடிக்க வாய்ப்புகள் அதிகம் உண்டு. எதிலும் அதிகம் பட்டுக் கொள்ளாதே. பெருமாள் உன் கூடவே இருப்பார். பெருமாள் பற்றியோ இல்லை கடவுளைப் பற்றியோ தேவைப்பட்டால் மட்டும் பேசு. முடிந்தவரை அதுபற்றி பேசாமல் இருந்துவிடு. பொதுவாக மாமனாரிடம் மௌனமாக இருந்து நல்ல பெயர் எடுத்துக் கொள். பண்டிகை திருவிழா காலங்களில் பெருமாள் உனக்கு வாட்ஸப்பில் வருவார். எல்லோரையும் அனுசரித்து பழகிக்கொள். பையன் சாதுவாக தெரிகிறான். பெரிதாக முரட்டு சுபாவம் தெரியவில்லை. பையன் உன்னை மனதார விரும்புகிறார். நீ சொன்னதற்காக ஜர்தா பழக்கத்தையும் விட்டுவிட்டான் என்று கேட்க மிகவும் சந்தோஷமாக இருக்கிறது. ஏதேனும் குடும்ப விஷேங்கள் உங்கள் உறவினர்கள் விசேஷங்களுக்கு இரண்டு நாட்கள் முன்னதாக சொல்லிவிடு. நானும் அப்பாவும் முடிந்தபோது வந்து தலையைக் காட்டிவிட்டு வந்து விடுகிறோம். நானும் ரொம்ப பேசக்கூடாது. நீ விவரம் தெரிந்தவள். கடைசியாக ஆனால் முக்கியமாக ஒரு வார்த்தை பையனுடன் பேசி பெருமாள் பக்கம் அவரை கொண்டு வந்து விடுகிறேன் என்ற பைத்தியக்கார முயற்சி எதுவும் செய்ய வேண்டாம். பெருமாளுக்கு நிறைய பக்தர்கள் இருக்கிறார்கள். அவரும் எந்த தேர்தலிலும் நிற்கப்போவது இல்லை. அவருக்கு உன்னுடைய கணவர் ஓட்டு தேவை இல்லை." என்று பெண்ணுக்கு புத்திமதி சொல்லி கணவனுடன் அவர்கள் வீட்டிற்கு அனுப்பினார்.

“உண்மையை தெளிவாய் அதிலும் பக்குவமாய்ச் சொல்வதில் உன்னை யார் மிஞ்ச முடிக்கும் அம்மா? உன் பெண் எதையும் சமாளித்து கொள்வாள். நீ என்னை பற்றிய கவலையை விடு. நான் தனியாக செல்லவில்லை. பெருமாள் கூட வருகிறார்”

** ** **

வேன் புறப்பட்டு மாப்பிள்ளை வீட்டிற்குப் போய் சேர்ந்தது.

புகுந்த வீட்டிற்கு வந்தாள். அவளுக்கு பால் பழம் கொடுத்து நம் வழக்கப்படி வரவேற்றார்கள். அருகில் உள்ள வீட்டில் இருந்தவர்கள் வந்தார்கள்.

“ஏன் அக்கா சேகர் வரவில்லை?” குரல் பலமாக வந்தது திரும்பிப் பார்த்தால் வித்யா நின்று கொண்டிருந்தாள்

“அப்புறமாக வருவான். நீ என்னோட எப்போது வேண்டுமானாலும் வந்து பேசலாம். எது வேண்டுமானாலும் என்னிடம் கேட்கலாம்.”

ஹாலில் பெரியார் படம் இல்லை என்பதை கோதையும் வேலாயுதமும் கவனிக்கத்தவறவில்லை.

ஓரளவிற்கு நல்லபடியாகவே எல்லாம் முடிந்து தனியறையில் விடப்பட்டார்கள். தனியறை. ராசநாயகம் நல்லபடியாய் மாடியில் கட்டியிருந்தார். நல்ல காற்றோட்டம் விசாலமான அறை. என்ன அவ்வளவு பெரிய அறையில் பெருமாள் மிஸ்ஸிங். அதை அவள் கவனிக்கத் தவறவில்லை. ஆனாலும் ஒரு நீர்வீழ்ச்சி மலையுடன் இயற்கை காட்சி வால்பேப்பர் அலங்கரித்துக் கொண்டிருந்தது. பெருமாளே மலையாகவும் பெருமாளே நீர்வீழ்ச்சியாகவும் இருக்கிறார். அவர் இல்லாத இடமே இல்லை என்று மனதிற்குள் பெருமாளை நினைத்து நன்றி பாராட்டினாள். பெரிய உண்மையை அவன் நன்றாக அறிந்திருந்தாள்.

“என்ன கோதை எதுவுமே பேச மாட்டேன் என்கிறாய்”

“நீங்க சொல்லுங்க. நான் கேட்கிறேன்”

“கடவுள் இல்லை கட்சியில் வாழ வந்ததற்கு வருத்தப்படுகிறாயா?”

“இல்லை”

“இப்படி ஒத்த வார்தேலே பதில் சொன்னா எப்படி? தெளிவா சொல்லவேண்டியது தானே”.

”இது பாருங்கள். வாழ்க்கையில் நம் வாழ்க்கையை புதிதாக ஆரம்பிக்க இருக்கிறோம். நம் வாழ்க்கை நாம் தான் வாழ வேண்டும். ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து அன்பு செலுத்தி வாழ்க்கையை சொர்க்கமாக மாற்ற முடியும். ஒருவர்மேல் ஒருவர் குறை கண்டு ஒருவர் மேல் ஒருவர் சந்தேகம் கொண்டு சண்டை போடுவதற்கு காரணங்கள் தேடிக்கொண்டிருந்தால் வாழ்க்கை நரகமாகிவிடும். ஒருவருக்கொருவர் அனுசரித்துப் போவதால் ஒருவரை ஒருவர் நன்றாக புரிந்து கொள்வதால் வாழ்க்கையின் மேடு பள்ளங்களை சமாளிக்க முடியும். தேவையான போது தேவையான பேச்சுக்களை மட்டும் பேசினால் வாழ்க்கை எப்போதும் சொர்க்கமாக இருக்கும். முக்கியமான ஒன்று நீங்கள் என்னிடம் உங்கள் கொள்கை பற்றிப் பேசி என்னை மாற்ற முயற்சிப்பது இல்லை நான் என் பெருமாளைப் பற்றி உங்களிடம் பேசி உங்களை மாற்ற அவர் மேல் ஈடுபாடு கொள்ளச் செய்வதோ தேவையில்லை. நான் அவரவர் இயல்பாகவே இருப்போம். குறைந்தபட்சம் 100 நாட்களுக்கு பொதுவாகப் பேசுவோம். வாழ்க்கையை புரிந்து கொள்வோம். வாழ்க்கை என்பது ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பது தான் என்ற உண்மையை பிடித்துக் கொள்வோம். வாழ்க்கையை எப்படி எடுத்துக் கொண்டு

செல்வது என்று பேசுவோம். நாம் சந்தித்தபின் நான் சொன்னதை எடுத்துக்கொண்டு படிக்கிறீர்கள். மிகவும் மகிஷ்ச்சி. பேசும்போது இலக்கியம் பேசலாம். கலை பற்றி பேசலாம். இல்லை சம்பந்தமில்லாத விஷயங்கள் பேசலாம் சரிதானே" கோதை பெரிய பாடமே நடத்தினாள்.

"அப்படின்னா?"

"சம்பந்தமில்லாத விஷயங்கள் எவ்வளவோ இருக்கு. கொரோன பற்றி பேசலாம் இந்திய பொருளாதாரம் பற்றி பேசலாம். சைனா கம்யூனிசம் பற்றி பேசலாம். ஒலிம்பிக் விளையாட்டு பற்றி பேசலாம். ஜல்லிக்கட்டு, சினிமா, வெட்டி பேச்சு பேசரத்தக்கு விஷயமா இல்லை?"

இருவரும் சேர்ந்து தங்களை மறந்து வாய் விட்டு சிரித்தனர்.

"அப்பா ரொம்ப புத்திசாலி பெண். உண்மையிலேயே நான் அதிர்ஷ்டசாலி. படிப்பில் கெட்டிக்காரி என்று மட்டும் நினைத்தேன். வாழ்க்கையை எவ்வளவு தெளிவாக புரிந்து கொண்டிருக்கிறாய். உன்னுடைய புத்திசாலித்தனத்திற்கு முன்பு எனது அறிவு மிகவும் மிகவும் குறைவு என்று சொல்லாமல் சொல்லிவிட்டாய். இவ்வளவு தெளிவாகப் பேசும் மனைவி கிடைத்த பிறகு ஒருவன் தன் மனைவி பேச்சைக் கேட்காமல் நடந்தால் அவனைவிட மடையன் உலகத்தில் இருக்க முடியாது. நீயே பேசு நான் கேட்கிறேன். ஞாயங்கள் எனக்கு நன்றாகத் தெரிகிறது. வாழ்க்கை என்பதை இவ்வளவு எளிதாக புரிந்து கொள்ளும் அளவில் சொல்வதற்கு வேறு யாராலும் முடியாதே. உண்மையிலேயே நான் உன்னை மனைவியாக பெற்றதற்கு கொடுத்துவைத்தவன்." சேகர் வியந்து போனான்.

"முக்கியமாக இன்னொன்று சொல்வேன். அது நம் போன்ற வேறு வேறு கொள்கைகள் உள்ளவர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும்."

“அப்படியா? இதெல்லாம் வேறே இருக்கா?” அதிசயித்து கேட்டான் சேகர்

“வாழ்க்கை நடத்துவதற்கு சிறிய புரிதல்கள் வாழ்க்கையை சிறப்பிக்கும்”

“சொல். நீயோ அதி புத்திசாலியாய் எனக்கு தெரிகிறாய். சொன்னல் கேட்டு அதன் படி நடக்கலாம் “

“இது ஒரு வகையில் விட்டுக்கொடுத்தல் தான். எதாவது நம் விவாதத்தில் ரொம்பவும் சூடாகப் போய்க் கொண்டிருந்தால் நீங்கள் “பெரியார் பெரியார்” என்று இருமுறை சொன்னால் அந்த விவாதத்தை அப்படியே விட்டுவிடவேண்டும். நீங்கள் ஏதாவது கேட்டு நான் வேண்டாம் என்று மறுப்பு சொல்லிக்கொண்டிருந்தால் நீங்கள் “பெரியார் பெரியார்” என்று இருமுறை சொன்னால் நான் உங்கள் கோரிக்கைக்கு இணங்க வேண்டும். இது உங்களுக்கும் பொருந்தும். என்ன நான் “பெருமாள் பெருமாள் “ என்று இருமுறை சொல்லவேண்டும்.”

“இது மிகவும் நன்றாக இருக்கிறதே”

“இன்னொன்று மிக முக்கியம். மாதத்திற்கு ஒரே முறை இதை பயன் படுத்தலாம். இரண்டாவது முறை பயன் படுத்தினால் யார் இரண்டாவது முறை பயன் படுத்துகிறார்களோ அவர்கள் பேசாமல் அடுத்தவர் கருத்தை ஏற்கவேண்டும் “

“அப்பா. இதை எல்லாம் எங்கே படிச்சே? படிச்சுத் தெரிந்ததா? இல்லை உன் கருத்துக்களா?”

“எதாக இருந்தால் நீங்கள் ஏற்றுக்கொள்வீர்கள்? அதுதான் நம் அடிப்படைத் தவறு. சொன்னது சரியா என்று பார்க்க மாட்டோம். யார் சொன்னது? என்று ஆராய்ச்சியில் இறங்குவோம்”

“அம்மா. ஆளை விட்டுவிடு நான் உன்னை மாதிரி சிந்தனையாளர் “இல்லை. எதோ எலெக்ட்ரிசின் வேலை செய்து நாளை ஒட்டிக்கொண்டிருக்கிறேன் நீ பெருமாள் என்று சொல்லவே வேண்டாம். கோதை சொல்கிறேன் என்று சொல். நான் அடிபணிந்து போகிறேன்”

இருவரும் வாய்விட்டு சிரித்தார்கள்

** ** **

கல்யாண வாழ்க்கை எல்லா புது மண தம்பதிகளின் வாழ்க்கை போல் தேனாக இனிக்கத்தான் செய்தது. ஊட்டி போனார்கள். ஊர் சுற்றினார்கள். சினிமா பார்த்தார்கள். அவன் குறைவாகவே பேசினான். அவள் நிறையவே பேசினாள். அவள் அறிவை அவள் பேசும் திறத்தை பேசும் விதத்தை ரசித்து மகிழ்ந்தான். ஆனால் அவளை எந்த விதத்திலும் எந்த விஷயத்திலும் சந்தோஷமாக வைத்திருக்க வேண்டும் என்று முடிவு செய்தான். கிடைப்பதற்கு அரிய பொக்கிஷம் தனக்கு கிடைத்தற்காக பேரானந்தம் அடைந்தான். அதை சரியாக வைத்துக்கொள்ளத் தன்னால் எந்த முயற்சியும் செய்ய வேண்டும். அதற்காக எதை வேண்டுமானாலும் விட்டுக் கொடுக்க வேண்டும் என்று மனதிற்குள் ஒரு தீர்மானம் செய்து விட்டான்.

ஒரு வித சிக்கலும் வரவில்லை சமையல் முதலிய வீட்டு வேலைகளில் மாமியாருக்கு உதவியாக இருந்தாள். மாமியும் அவளுடைய நேர்த்தியான வேலையை புகழிந்து தள்ளினாள். கணவனிடம் பேசும்போது பெண்ணை சிறப்பாக வளர்த்திருக்கிறார்கள் என்று அவளுடைய பெற்றோரை புகழ்ந்தார்.

அவளைப்பற்றி சேகர் வெகுவாகப் புகழ்ந்து அவள் அவளுடைய புத்திக்கூர்மை, அவளுடைய தெளிவான சிந்தனை, அவருடைய தீர்க்கமான பார்வை ஐயோ அப்பா இந்த மாதிரி

எனக்கு பெண் கிடைக்க ரொம்ப கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்று மனம் விட்டு அம்மாவிடம் சொல்லி விட்டான்.

அம்மாவுக்கும் மிகுந்த திருப்தி. பையனுக்கு பிடித்துவிட்டது கொஞ்சம் கெட்டிக்காரனாக இருக்கிறான். இனிமேல் நமக்கு என்ன வேண்டும் என்று எண்ணி சேகரிடம்

“பெண் கெட்டிக்காரியாய் இருக்கிறாள் அவள் மனம் கோணாமல் ஒத்துப்போப்பா. அவள் நல்லபடியாய் குடும்பத்தை கொண்டுசெல்வாள்.” என்கிறார்.

முதல் மாத சம்பளம் வந்ததும்.”உனக்கு என்ன வேணும். முதல்லே நான் வாங்கித்தரது உனக்கு ரொம்ப பிடித்ததாய் இருக்கவேண்டும்” ஆசையாகக் கேட்டான் சேகர்

“எனக்கு ஒரு அண்ட்ராய்டு போன் வேணும்”.

“அது ரொம்ப விலையாகுமே”

“அதில் குறைந்த விலையிலும் இருக்கு அதில் தவணை முறையும் இருக்கு”

அவன் ஆர்வம் குறைவதைக் கண்டாள்.

“நீங்க கேட்டதால் நான் கேட்டேன். எனக்கு வேண்டாம்”

“இல்லை. அம்மாவிடம் சொல்லிவிட்டு நான் வாங்கித்தருகிறேன். நீ முதலில் கேட்டது உனக்கு கிடைக்கவேண்டும்.”

அம்மாவிடம் சொன்னபோது அம்மாவே பணம் தருவதாகவும் அவளுக்கு உடனேயே வாங்கித்தரும்படியும் சொன்னது சேகரையும் கோதையையும் திகைக்கவைத்தது.

“அம்மா என் சம்பளத்தில் வாங்கித்தரவேண்டும் அம்மா.” சேகர் சொன்னவுடன் அம்மா பாதிப் பணம் தருவதாகச் சொன்னார்கள்.

அவள் சமையலுக்கு உதவ வரும்போது அம்மா “இப்போது தான் கல்யாணம் ஆகி இருக்கிறது. நீ கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள். கொஞ்ச நாட்கள் கழித்து நானே உன்னை கூப்பிடுகிறேன். நீ சமையல் மொத்தமாக செய்துவிடலாம்.” என்று சொல்லிப் பார்த்தார்

ஆனால் ஆனால் கோதை அவ்வளவு சுலபத்தில் விடுவதாக இல்லை.

“அம்மா நீங்கள் வயதானவர்கள். உங்களுக்கு உதவுவதற்காக தான் நான் உங்கள் பையனைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறேன். திருமணம் செய்துகொண்ட பின் அந்தப் பெண் அந்த புகுந்த குடும்பத்தில் முழுப் பொறுப்பு எடுத்துக்கொண்டு வயதான மாமியாருக்கு சமையலில் உதவி செய்ய வேண்டும். அதனால் எனக்கு உங்களுக்கு உதவுவதில் ஒன்றும் கஷ்டமில்லை. எனக்கு என் அம்மா சமையல் செய்ய கற்றுக்கொடுத்து இருக்கிறார்கள். இதில் எனக்கு ஒன்றும் கஷ்டமில்லை எத்தனையோ வீட்டில் கல்யாணம் ஆன உடனேயே அந்தப் பெண் புகுந்த வீட்டின் முழுப்பொறுப்பையும் எடுத்துக்கொள்கிறார். வயதான மாமியார், தள்ளாத மாமனார், வயது வந்த மைத்துனர், திருமணமாகாத நாத்தி எத்தனையோ பிரச்சினைகள் ஒரு குடும்பத்தில் உண்டு. ஆனால் இந்த குடும்பத்தில் எனக்கு எந்தவித பிரச்சனையும் இல்லை. எனக்கு சந்தோஷமாக இருக்கிறது. உங்களை சந்தோஷமாக வைத்துக் கொள்வது தான் என்னுடைய முதல் வேலை. அதனால் நான் வேலை செய்கிறேன். நீங்கள் தயவுசெய்து மாமனாருக்கு என்ன என்ன பிடிக்கும்? என்ன செய்தால் பிடிக்காது? என்று தயவுசெய்து சொல்லிக்கொடுங்கள். ஏனென்றால் அவர் மனம் கோணாமல் நடக்க வேண்டும் இல்லையா “

அவள் பேசப் பேச சேகரின் அம்மாவுக்கு உடம்பெல்லாம் குளிர்ந்தது. அவ்வளவு நல்ல பெண் நான் தேடி இருந்தால் கூட கிடைத்திருக்காது. ஏதோ சேகருக்கு பெரிய அதிர்ஷ்டம். என்ன நமது கணவர் ஏதாவது ஏடாகூடமாக செய்து பெண் மனது நோகாமல் நடக்க வேண்டும். அதுக்கும் அந்த பெருமாள்தான் சரியான வழி வகுக்க வேண்டும்.

“அம்மா நான் என் அம்மாவிடம் பேசிக் கொள்ளலாமா?”

“இது என்ன கேள்வி அவர்கள் உன்னை பெற்றவர்கள். உனக்கு திருமணம் ஆனதால் உன்னை இங்கே கொண்டு விட்டார்கள். ஆனாலும் எப்போதும் அவர்கள் உன் பெற்றோர்கள் தான். நீ எப்போது வேண்டுமானாலும் பேசலாம். அவர்களும் உன்னிடம் பேசலாம். இது வாழ்க்கையின் இரண்டாவது பகுதி. முதல் பகுதியை முற்றிலும் மறக்க வேண்டும் என்று நினைக்கக் கூடாது. அவர்களுக்கு நீ உதவி செய்யவேண்டும் என்று நினைத்தால் என்ன செய்யவேண்டும் எப்படி செய்யவேண்டும் என்று நினைக்கிறாயோ அப்படி செய்யலாம். என்னிடமும் அதற்காக உதவி கேட்கலாம்”

“டே சேகர் நல்ல பொண்ணு. உனக்கு அதிஷ்ட வசமாய் கிடைத்திருக்கிறாள். மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம் என்னு சொல்லுவார்கள். நீ அவளை நன்றாக வைத்துக்கொள்ள வேண்டும். மனம் கோணாமல் நடந்துகொள். கெட்டபழக்கம் கெட்டசகவாசம் வேண்டாம்.” என்றார்.

“உனக்கு தான் தெரியுமே. அம்மா கோதையை பார்த்தவுடன் ரொம்ப நாளா நான் போட்டு கொண்டு இருந்த ஜர்தாவே துண்டை காணும் துணியை காணும் என்று ஓடிவிட்டது. கோதை இருக்கும்போது அது மாதிரி எந்த கெட்ட பழக்கமும் என்னிடம் வராது. அவள் வரவும் விடமாட்டாள்.”

அம்மாவுக்குப் பெருமை பிடிக்கவில்லை பையன் திருமணத்தால் மிகவும் மகிழ்ச்சி அடைந்து இருக்கிறான். அதைவிட முக்கியம் மருமகள் சொன்னபடி பையன் நடக்கிறான். மிகவும் கெட்டிக்கார பெண். அவர்களின் வாழ்க்கை நன்றாகவே நடந்து கொண்டிருக்கிறது. இன்னும் சிறப்பாக நடத்திக் கொண்டு போவாள் என்ற நம்பிக்கையும் வந்துவிட்டது. ஒரே பையன் திருமண வாழ்க்கை மிகவும் சிறப்பாக அமைய வேண்டும் என்று தான் பெற்றோர்கள் விரும்புவார்கள். அது நடந்து விட்டது. திருப்தியா இருக்கிறது. இதை விட வேற என்ன வேண்டும் பெற்ற தாய்க்கு?.

கோதைக்கு ஆஹா எவ்வளவு நல்ல குடும்பம் எனக்கு கிடைத்திருக்கிறது. என்னுடைய பெருமாள் கொடுத்த அருள். பெருமாள் என்னை எப்போதுமே கைவிடமாட்டார். பெருமாளின் பாதங்களை எப்போது பற்றும் மனம் பெருமாள் கொடுக்க வேண்டும்.

அன்றிரவே அம்மாவிடம் போனில் தொடர்பு கொண்டார்

“கோதை எப்படிப்பா இருக்கே? மாப்பிள்ளை அன்பாக கவனித்துக் கொள்கிறாரா? மாமியார் எப்படி இருக்கிறார்? மாமனார் எப்படி இருக்கிறார்? நீ யார் மனமும் கோணாமல் நடந்துகொள்ள வேண்டும். உனக்கு ஏதாவது பிரச்சினை என்றால் பெருமாளிடம் சொல்லு. அவர் உனக்கு நல்ல வழி காட்டுவார். நல்லதே செய்வார். நம்பிக்கை மட்டும் வேண்டும். திடமான ஆழமான நம்பிக்கை மாத்திரம் வைத்துக் கொள்வதோடு மற்றதை பெரியவர் பெருமாள் பார்த்துக்கொள்வார் என்று விட்டுவிடு.”

“அம்மா அவர் என்மேல் மிகவும் ஆசையாக இருக்கிறார். எனக்கு அவருடைய முதல் சம்பளத்தில் என்ன வேண்டும் என்று கேட்டார். ஆண்ட்ராய்டு போன் கேட்டேன். வாங்கி தரப்போகிறார். மாமியாரும் என்னை மிகவும் நன்றாக கவனித்துக்

கொள்கிறார்கள். இந்த மாதிரி குடும்பத்தில் நான் வாழ்க்கை நடத்துவதற்கு மிகவும் கொடுத்து வைத்தவள். எல்லாம் அந்த பெருமாள் செயல். அந்த பெருமாளின் திருவிளையாட்டை யாருமே கண்டுபிடிக்க முடியாது. ஆனால் என்னை பொருத்தவரை நன்றாக செய்திருக்கிறார். என்னை நன்றாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறார்."

** ** **

அம்மாவிடம் சேகர்; "அம்மா பக்கத்து ஊரில் ஏதோ புதிதாக படம் ரிலீஸ் ஆயிருக்காம் நானும் கோதையும் போயிட்டு வரலாம் என்று இருக்கிறோம்"

"நல்லதுடா போயிட்டு வா ஜாக்கிரதை எப்படி போகிறீர்கள்?'

"அம்மா நான் என் நண்பனிடம் சைக்கிள் கேட்டு இருக்கிறேன் நான் ஒரு சைக்கிளிலும் அவள் ஒரு சைக்கிளிலும் போவோம்."

"அவளால் அவ்வளவு தூரம் சைக்கிள் ஓட்ட முடியுமா?"

"அவள்தான் தனக்கு தனியாக சைக்கிள் வேண்டும் என்று கேட்டாள்"

"ஜாக்கிரதையாக போயிட்டு வா. சினிமாக்குப் போற, சினிமா பாத்துட்டு நேரே வீட்டுக்கு வரே. அவளைக் கூட்டிக்கிட்டு அங்க போறேன் இங்க போறேன்னு லேட் பண்ணாதே."

"சரிம்மா. வரும்போது ஹோட்டல்ல டிபன் சாப்பிட்டு வருவோம். எங்களுக்கு இரவு சாப்பாடு வேண்டாம்."

"போற வழியில ஒரு பூக்கடையில் அவளுக்கு பூ வாங்கி கொடுத்து விடு. நம் வீட்டில் யாருக்கும் பூ வாங்கிக்கொடுக்கும் பழக்கமே இல்லை. நீ நிறைய பூ வாங்கிக்கொடு."

சந்தோஷமாகவே கிளம்பினார்கள்

"டேய் சேகர் காசு கொஞ்சம் கூட எடுத்து போடா"

கோதையும் சைக்கிளில் பை சொல்லி விட்டு மகிழ்ச்சியாக கிளம்பினார்கள்

"என்ன கோதை ரொம்ப நாள் கழிச்சு சைக்கிள் ஓட்டுற. கஷ்டமா இருக்கா?"

"அதெல்லாம் ஒன்னும் இல்லை. நான் வீட்டிலிருந்த போதும் வாரம் ஒரு முறை தோழியோடு சைக்கிளிலில் சுற்றுவோம். வாரா வாரம் எங்காவது போகலாமா என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். சைக்கிளில் போவது சுகம் தான். உடலுக்கு ஆரோக்கியமும் கிடைக்கும் உள்ளத்துக்கு மகிழ்ச்சியும் கிடைக்கும்"

"மெய்யாலுமா! இதை முதலில் என்னிடம் கேட்டிருந்தால் என் செல்லத்திற்கு சந்தோஷமாக செய்து கொடுத்திருக்க மாட்டேனா? நானும் கூட வருவேன். கூட வரலாமா? வேண்டாமா? கூட வந்தால் உன்னுடைய மகிழ்ச்சி குறைந்து விடுமா? எனக்கும் நீ சைக்கிள் ஓட்டினால் பிடிக்கும். உன் உடம்பு ட்ரிம்மாக இருக்கும். உடல் நலமும் சீராக இருக்கும். உன்னை ஆஸ்பத்திரிக்கு அடிக்கடி கூட்டிச் செல்ல வேண்டாம். அடுத்த வாரத்தில் இருந்து நானே கூட வருகிறேன். நான் வருவதற்கு உனக்கு விருப்பம் இருந்தால் நானே வரேன். நான் வர முடியவில்லை என்றால் உன்னுடைய பழைய பிரண்டு கூட செல்லலாம். அதற்கு அம்மாவிடம் நான் பர்மிஷன் வாங்கி விடுகிறேன்"

"பழைய பிரண்ட் எல்லாம் சொல்லாதீர்கள். நேற்று கூட அவளிடம் பேசினேன்."

"அப்படியா?"

“ஆமாம். அவங்க வீட்ல அவருடைய கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்கிறார்களாம்.”

“செய்ய வேண்டியது தானே? சந்தோஷம்.”

“அவளுக்கு சந்தோஷம் இல்லை.”

“ஏன்?”

“அவளுக்கு மேலே படிக்க வேண்டுமாம். அவளுக்கு வாழ்க்கையில் ஒரே குறிக்கோள் உண்டு. அவள் நன்றாக படித்து அவள் ஜாதியில் உள்ள மற்ற பெண்களை முன்னேற்றப் போகிறாளாம்.”

•ஒரு சின்ன சந்தேகம். உனக்கு இந்த மாதிரி எதுவும் எண்ணங்கள் ஏன் வரவில்லை?”

“எல்லோருக்கும் இது மாதிரி வராது. எனக்கு என் குடும்பம் அப்பா அம்மா. அவர்களை சந்தோஷமாக வைத்துக் கொள்வது ஒன்றுதான் என் குறிக்கோள். என் தாய் தந்தையருக்கு நான் திருமணம் செய்து கொண்டால் அவர்களுக்கு வாழ்க்கையில் அமைதியாக இருப்பார்கள். ஒரு கடமை முடிந்தது என்ற நிம்மதியுடன் இருப்பார்கள். என்னை பொறுத்தவரையில் கல்யாணம் முதலில். பின்பு வசதியும் வாய்ப்புக்களும் அமையுமானால் சமூக சேவை.”

“சமூக சேவை என்றால்”

“பெண்கள் படிப்பு, பெண்கள் முன்னேற்றம் “

“என்னை பொறுத்தவரையில் உனது தோழியை மிகவும் பிடித்து இருக்கிறது. ரொம்ப நல்லா இருக்கே. இந்த மாதிரி நிறையப் பேர் தொண்டு செய்தால் நாடு முன்னேறும். மக்களுடைய வாழ்க்கை முன்னேறும். எனக்கு இந்த எண்ணம் மிகவும்

பிடித்திருக்கிறது. அடுத்த தடவை பார்க்கும் போது என்னிடம் சொல்லு. பெரியாருடைய திட்டங்கள் அதில் ஏழைகளின் முன்னேற்றம் பற்றி அவரிடம் சொல்லுவேன்”

“ஐயோ அது மட்டும் வேண்டாம் அவளுக்கு பெரியாரை சுத்தமாக பிடிக்காது”

“ஏன்?”

“நானும் அவளும் இவ பற்றி பேசி இருக்கிறோம் அவள் நான்கு காரணங்கள் சொல்லுவாள்.

“ஒன்று- ஏன் எதற்கு என்று கேள்வி கேட்கும் தொண்டர்கள் எனக்குத் தேவையில்லை. நான் சொல்லுவதை அப்படியே ஏற்றுக்கொள்ளும் தொண்டர்கள் தான் எனக்குத் தேவை என்று பேசுவாராம். இதில் என்ன நியாயம் இருக்கிறது அவர் என்ன கடவுளா?அவர் சொல்லுவது எல்லாம் சரி என்று எல்லோரும் எப்போதும் ஒத்துக் கொள்ள முடியுமா?”

“இரண்டாவது- எல்லோரிடமும் பணம் கேட்பார். பணத்தை சேர்த்து வைப்பார். ஆனால் எத்தனை ஏழைகளுக்கு எவ்வளவு பணம் கொடுத்தார்? அவர் கொடுத்ததாக செய்தியும் கிடையாது.”

“மூன்றாவது- தள்ளாத வயதில் மறுமணம் செய்து கொண்டார். தலைவர் மற்றவர்களுக்கு உதாரணமாக இருக்க வேண்டாமா?”

“நான்காவதாக தமிழ் மொழியை காட்டுமிராண்டி மொழி என்று சொல்லுவார். திருக்குறளை மதிக்கமாட்டார்”.

சேகர் மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தான்

கோதை தொடர்ந்தாள், “பெண்கள் முன்னேற்றம் முன்னேற்றம் அடிக்கடி சொல்கிறீர்களே அதில் உண்மையாகவே

அக்கறை இருந்திருந்தால் பெரியார் என்ன செய்திருக்கவேண்டும் தெரியுமா?”

“என்ன செய்திருக்கவேண்டும். அவர் தான் அது பற்றி நிறைய பேசினாரே.”

“அவர்களுக்காக எப்போதாவது குரல் கொடுத்திருக்கிறாரா? அவர்களுக்காக ஏதாவது செய்திருக்கிறாரா? உண்மையிலேயே சுதந்திரம் மறுக்கப்பட்ட பெண்கள் எங்கே இருக்கிறார்கள். முஸ்லீம் சமூகத்தில். அவர்கள் தொழுகைக்கு போகக்கூடாது. அதிகம் படிக்கக்கூடாது. ஆண்களை பார்க்கக்கூடாது. பேசக்கூடாது. ஏகப்பட்ட கட்டுபாடுகள்.”

"இந்து மாதத்தில் உள்ள சதிஅதாவது உடன்கட்டை ஏறுதல் என்ற வழக்கத்தை எதிர்த்தார் தெரியுமா?"

"இது உங்கள் தலைவர் சொன்னதா?"

"என் அப்படி கேக்குறே?"

"பின்னே... நீங்க எல்லாம் கேள்வியே கேக்கமாட்டீங்க. தப்பு தப்பு. கேள்வியே கேட்கக்கூடாது"

"என்ன ரொம்பத்தான் கலாய்க்கிறே."

"நான் என்ன சொல்றதுன்னே புரியல்லே".

"நீ என்ன சொல்லவரேன்னே புரியவில்லை.".

"பொறுமையாய் கேளுங்க. உங்களுக்கு தெரிந்து நீங்க சொல்ற வழக்கப்படி கடந்த நூறு வருஷங்களில் எவ்வளவு பேர் செத்து இருக்காங்க.”

"இதுக்கெல்லாம் கூட கணக்கு வச்சுஇருப்பங்களா?"

"வச்சு இருக்கணும். அது தான் அரசாங்கம். ஆனால் அதிலே யாரும் சாகல்லே. ஆனால் அது மாதிரி ஒரு வழக்கம் ரொம்ப

காலத்துக்கு முன்னாலே இருந்திருக்கலாம். ராஜாராம் மோகன் ராய் என்ற வங்காளி போராடி அதற்கு எதிராக சட்டம் கொண்டுவந்தார். ஆனால் வடக்கில் சில ஊர்களில் சதி கோயிலென்று இருக்கும். இதே வழக்கமாக இருந்து இதையே எல்லோரும் பின்பற்றி இருந்தால் அதுக்கு முக்கியம் கொடுத்து சதி கோயில் வந்து இருக்காது. எதோ ஒன்றிரண்டு பேர் இந்த செயல் செய்ததால் அவர்களுக்கு கோயில் வந்திருக்கலாம். நம் ஊரில் சில ஆண்டுகளுக்கு முன்பு சேலத்தில் யாரோ ஒரு செட்டியார் இறந்தார். அவர் இறந்த சில மணிகளிலேயே அவர் மனைவியும் இறந்தார். பேப்பரில்கூட வந்திருந்தது. ஏன்? அவ்வளவு ஆசையாய் கூட இருந்திருக்கலாம். பிரிவை தாங்கமுடியாமல் இறந்திருக்கலாம்."

சேகருக்கு ஏண்டா இந்த விஷயத்தை சொன்னோம்னு ஆகிவிட்டது.

“அம்மா தாயே, என்னை விட்டு விடு. நான் இப்போது பெரியார் என்று இரண்டு தடவை சொல்லலாமா? உன்னுடைய தோழி என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். அவருடைய தொண்டும் தொண்டுள்ளமும் வாழ்க.”

“தாராளமாக சரியான இடத்தில் உபயோகப்படுத்தி இருக்கிறீர்கள். வாழ்த்துக்கள்” கோதை சொல்லி பலமாகச் சிரித்தாள்.

கோதைக்கும் அந்த விஷயத்தில் அதிகம் வளர்த்தாமல் அப்படியே விட்டுவிட்டு வேறு விஷயத்திற்கு சென்றது சந்தோஷத்தை கொடுத்தது.

“உன் பிரண்டை விடு, நீ பெரியாரை பற்றி என்ன நினைக்கிறே?”

“உண்மைய சொல்லனுமா? இல்லை உங்களுக்காக ஏதாவது சொல்லனுமா?”

“என்னம்மா இப்படி பேசுற. நீ ஒரு சிந்தனையாளர் என்று நான் எப்பவோ புரிந்து கொண்டேன். அதனால் தான் நீ என்ன நினைக்கிறே என்று கேட்கிறேன்”

“அப்படியானால் உண்மையாகவே நான் நினைத்ததை கூறுகிறேன். அதை ஏற்றுக் கொள்வதும் ஏற்றுக்கொள்ளாததும் உங்கள் விருப்பம்”.

“சரி சொல்லு”

“பெரியார் அவர் எதற்காக ஆரம்பித்தார் என்று தெரியவில்லை. ஆனால் தீவிரமாக கடவுளைப் பற்றி ஆராய்ந்தார். அவரிடம் ஓரளவு கடவுளைப் பற்றிய உண்மை அறிய வேண்டும் என்று தேடுதல் இருந்தது. அதில் அவர் இன்னும் முயற்சி செய்திருந்தால் இன்னும் தேசிய அளவில் பெரிய உயரத்திற்கு அளவிற்கு வளர்ந்திருப்பார். செயற்கையான உயரம் தாண்டி இயற்கையாக அதிக உயரம் போயிருக்கலாம். அந்த ஆரம்ப தேடுதல் முயற்சிக்குத் தேடுதலுக்கு இறைவன் அவருக்கு சற்று புகழும் பணமும் கொடுத்தார். அந்தப் புகழில் பணத்தில் மயங்கி அவர் தேடுதலை நிறுத்திவிட்டார். சாதாரணத்திற்கும் சற்று கூடுதலாக இருந்துவிட்டு போய்விட்டார். அவர் அவருடைய தேடுதலைத் தொடர்ந்து இருந்தால் அவர் அதிக உயரம் போயிருப்பார். அவர் அதை வாழ்க்கையில் இழந்துவிட்டார் என்பது தான் என்னுடைய உண்மையான கருத்து “

“அடேயப்பா இது முற்றிலும் புதிய சிந்தனை. இதுவரையிலும் பெரியாரைப் பற்றி எவ்வளவோ பேர் பேசி விட்டார்கள். நீ கூறுவது சரியா தப்பா என்பது தெரியாது. ஆனால் இந்தக் கோணத்தில் அவரை சித்தரிப்பது நீ தான் முதல் ஆள். எனக்கு உன்னை வாழ்த்துவதா இல்லை கடித்துக் கொள்வதா என்று புரியவில்லை.

“என்ன இது புது மாதிரி சிந்தனையா இருக்கிறது. அவர் கடவுளை தினமும் திட்டிக் கொண்டிருந்தார். தெரியுமா? “

“தெரியும்.”

“அப்படியென்றால் அப்படி தெரிந்துகொண்டு இந்த மாதிரி சொல்கிறாய்.”

“ஆமாம். எதிலும் எந்த விஷயத்திலும் தீவிரமும் தொடர்ச்சியும் செய்தால் அதில் இறைவன் இருப்பான். உங்களுக்கு நான் ஒன்று சொல்கிறேன். ஒருவர் தினமும் கல்லால் இறைவனை அடித்தார். கல்லால் அடித்த பிறகு தான் அவர் உணவு கொள்வார். தொடர்ந்து செய்தார். அவரும் ஒரு நாயினார் ஆனார். நீங்க பொறுமையாக சிந்தித்துப் பாருங்கள். ஈவேரா இருந்த சமயத்தில் பெரிய அறிவாளியாக ராஜாஜி. பெரிய பேச்சாளியாக அண்ணாதுரை, சத்யமூர்த்தி, பெரிய படிப்பாளியாக அண்ணாவால் நடமாடும் பல்கலைக்கழகம் என்று பெயர் சூட்டப்பட்ட நெடுஞ்செழியன், பெரிய சமூக தொண்டனாக ஜீவா, தன்னலம் சிறிதும் இல்லாத மக்கள் தொண்டனாக காமராஜ், தமிழில் இலக்கியம் படைத்த கல்கி, ரசிகமணி, மா.பொ.சி ஏன் தமிழுக்காகவே உழைத்த உ.வே சாமிநாதையர் இருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் இல்லாத புகழ் பணம் எதற்காக பெரியாரிடம் வந்தது. அவர்களிடம் இல்லாத எதோ ஒன்று பெரியாரிடம் இருந்தது. அது என்ன? அது தான் தேடல் என்பேன். அதனால்தான் சொல்கிறேன் ஏதாவது ஒரு விஷயம் எடுத்துக்கொண்டு அது தீவிரம் காட்டினால் அது இறைவனுக்கு மிகவும் பிடிக்கும். 'கண்முடித்தனமாக கடவுளை நம்பும் மனிதனை விட படித்து கடவுளே இல்லை என்று விவாதம் செய்யம் மனிதனை கடவுள் நேசிக்கிறார்' யார் சொல்லுகிறார் தெரியுமா? விவேகாநந்தர்.

என்ன கோவில் கட்டி கருவறைக்குள் இருப்பதற்கு தகுதியானவரை கோவிலுக்கு வெளியே காவலுக்காக நிறுத்தி விட்டார்கள்.”

“ஐயோ உனக்குள் இவ்வளவு அறிவா? சிந்தனையா? எனக்கு மனைவியாக வந்தது எனக்கு மிகவும் அதிர்ஷ்டம் இன்னும் ஒரு கேள்வி, கேட்கலாமா?”

“தாராளமாக”

“உங்களுக்காக ஏதாவது சொல்லணுமான்னு கேட்டியே? அப்படி கேட்டிருந்தால் என்ன சொல்லியிருப்பே?”

“நீங்கள் உங்கள் சிந்தனையில் முன்னேறுவது தெரிகிறது. நீங்கள் அப்படி கேட்டிருந்தால் நான் அப்பா! பெரியரா? அவர் எவ்வளவு பெரிய ஆளு! நான் அவர் முன்னால் எம்மாத்திரம்! அவரைப் பற்றி பேச என்னிடம் என்ன தகுதி இருக்குன்னு கேட்டிங்க’ன்னு சொல்லியிருப்பேன் “

“அசத்திட்டே. உண்மையிலேயே நீ உயர்ந்துகொண்டு வருகிறாய்.”

சினிமா கொட்டகையில் கூட்டம் அதிகமாக இருந்தது.

“கூட்டமா இருக்கே”

“புது படம் இல்லையா? கூட்டம் அதிகமாகத்தான் இருக்கும். ஆனால் இன்று மிகவும் அதிகமாக இருக்கு”

“டிக்கெட் கிடைக்குமா? இல்லை திரும்பிடலாமா?”

‘என்ன செய்யலாம். கோதையை கூட்டிட்டு கொண்டு வந்து சினிமா பார்க்காமல் திரும்பறதா’ என்று சேகர் திகைத்து நின்றான்

டிக்கெட் டிக்கெட். 100 ரூபாய் டிக்கெட் 100 ரூபாய் என்று கூவிக் கொண்டு ஒரு ஆள் அவர்களிடம் வந்தான் சேகர். அரை

மனதுடன் அவனிடம் பேரம் பேசலாமா என்று ஒரு நொடி யோசித்தான்.

அவனை அழைத்த போது கோதை குறுக்கிட்டு, “எனக்கு அப்படியாவது சினிமா பார்ப்பது அவசியம் இல்லை. நாம் இங்கே ஜாலியாக சுற்றிவிட்டு வீட்டுக்கு போகலாம். இது மாதிரி எல்லாம் செய்யக்கூடாது. இதுவும் ஒரு வகை அடிக்ஷன் தான்”. என்று முதலிலேயே தடை செய்துவிட்டாள்.

சேகருக்கு சே என்று போய்விட்டது. முதலில் மனைவியை கூட்டிக் கொண்டு சினிமாவுக்கு வந்திருக்கிறான். சினிமா பார்க்க முடியவில்லை. ஆனாலும் மனைவி சினிமாவிற்காக அதிக காசு கொடுத்து டிக்கெட் வாங்குவது விரும்புவதில்லை என்ற மகிழ்ச்சி அவன் மனதில் அவன் முகத்தில் தெரிந்தது.

அப்போது அங்கே வந்த எலக்ட்ரீசியன் “டேய் சேகர். நீ எங்கடா இங்க வந்தே? உன் கல்யாணத்துக்கு நான் வர முடியல. அப்பாவுக்கு உடம்பு சரியில்லை. சாரி. இவங்க தான் உன் மனைவியா?” விசாரித்தான்.

“மணியா? ஆமாம். இவங்க என் மனைவி. பேர் கோதை. இவன் என் கூட வேலை செய்யும் எலெக்ட்ரிசியன். பேர் மணி. அறிமுகத்துக்கு பின் நீ இங்க எப்படி?”

“எப்படி என்னை கேக்குறே? இந்த எரியாவிலே இப்போ எனக்கு போஸ்டிங். இந்த தியேட்டர் என் கண்ட்ரோல். புது படம் இலவசமா டிக்கெட் கேட்க முடியாது.”

“இலவசம் எல்லாம் வேண்டாம் எனக்கு சரியான காசு கொடுத்து டிக்கெட் கிடைச்சாலே போதும்”

“அது பெரிய விஷயமே இல்லை. உனக்கு எத்தனை டிக்கெட் வேண்டும்?”.

“எனக்கு ரெண்டு டிக்கெட் போதும்”

“அவ்வளவு தானே விடு டிக்கெட் கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன் ஒரு விஷயம் உங்க ரெண்டு பேருக்கும் டிக்கெட் மட்டும் ஏன் அக்கவுண்ட்”

“வேணாம்டா மணி”.

“பரவால்ல சேகரு கல்யாணத்துக்கு மொய் என்று வைத்துக்கொள்”

நல்லவிதமாக சினிமா பார்த்துவிட்டு வழியில் ஹோட்டலில் ஸ்பெஷல் மசால் தோசை ஸ்பெஷல் மசாலா பால் எல்லாம் சாப்பிட்டுவிட்டு வீடு திரும்பினார்கள்.

சந்திராவுக்கு பையன் மருமகளுடன் சினிமா சென்று வந்தது குறித்து சந்தோஷம்.

** **

“அம்மா இன்று என் அலுவலகத்தில் அலுவலகத்தில் ஒருவர் பணி நிறைவு பெறுகிறார் அதற்காக ஒரு விழா ஏற்பாடு செய்திருக்கிறார்கள். நான் கோதையைக் கூட்டிக் கொண்டு போகவா?”

“இதுல என்னடா கேள்வி? உன் மனைவியை உன் அலுவலகத்திற்குக் கூட்டிட்டு போ. நண்பர்களுக்கு அறிமுகம் செய்து வை. சீக்கிரம் வந்து விடு”

சைக்கிளில் கோதை பின்புறம் அமர்ந்து வேடிக்கை பார்த்துக்கொண்டே சென்றாள். அவளுக்கு புதுமையாகவும் மனதிற்கு நிறைவு தருவதாகவும் இருந்தது. நிகழ்ச்சி ஆரம்பிக்க வேண்டிய நேரத்தில் இறைவணக்கம் பாடுவதற்கு வரவேண்டியவர் வரமுடியவில்லையாம். அவர் இப்போதுதான் தொலைபேசியில்

சொன்னார். யாராவது இங்கு பாடுவார்களா? என்று விழா அமைப்பாளர் கேட்டார்.

சேகர் கோதையிடம் “நீ ஏதாவது பாட்டு பாடுவியா?” என்று கேட்டான்.

“நான் சாமி பாட்டு தான் போடுவேன். அதுதான் தெரியும்.”

“சாமி பாட்டு தான் பாடணும். முதலில் இறைவணக்கம் தான் படுவார்கள். நீ சாமி பாட்டு பாடு.”

என்று சொல்லி விழா அமைப்பாளரிடம் தன் மனைவி இறைவணக்கம் பாடுவார் என்று சொல்லிவிட்டான்.

விழா அமைப்பாளருக்கு மிகவும் சந்தோஷம் ஒன்று இறைவணக்கம் பாடுபவர் வரவில்லை என்ற குறை தீர்ந்தது. இரண்டாவது சேகரின் புது மனைவி இறைவணக்கம் பாடப் போகிறார்.

இறைவணக்கம் சேகர் மனைவி பாடுவார் என்று அறிவித்து “பாடுங்கள்” கோதையிடம் மைக்கைக் கொடுத்தார்.

கோதை “முத்தைத்தரு பத்தித் திரு” என்ற திருப்புகழை அழகாக பாடினார்.

எல்லோருக்கும் ஒரே அதிர்ச்சி. இவ்வளவு பெரிய பாட்டை இவ்வளவு அநயாசமா பாடுகிறார். எல்லோரும் சேகரிடம் அவர் மனைவி பாடிய பாட்டுக்காக பாராட்டினார்கள். சேகருக்கு மிகவும் மகிழ்ச்சி.

வீட்டுக்கு வந்து வரும்போது சைக்கிளில் “பெருமாள் பெருமாள் தான் என்று சொல்வாய். நீ பாடினது முருகன் பாட்டு தானே. அது எப்படி உனக்கு தெரியும்?” என்று சேகர் கேட்டான்.

“எனக்கு பெருமாள் பாசுரங்களும் தெரியும். அருணகிரிநாதர் பாடிய திருப்புகழும் தெரியும். பக்திக்கு பாசுரம். தமிழ் சுவைக்கு

திருப்புகழ். அருணகிரிநாதரின் சொல்லாற்றல் எனக்கு ரொம்ப பிடிக்கும்.” என்று சொல்லி திகைக்க வைத்தாள்

வீட்டிற்கு வந்தவுடன் அம்மாவிடம் ஒரே புகழ்.

“அம்மா கோதை இன்று விழாவில் நன்றாக பாடி மிகவும் அசத்தி விட்டாள். அவள் இவ்வளவு நன்றாக பாடுவாள் என்று எதிர்பார்க்கவே இல்லை. விழா நடத்தியவர் இனிமேல் இந்த அலுவலக எல்லா நிகழ்ச்சிகளிலும் உன் மனைவி பாட்டுதான் என்றார்னா பாரேன்”.

அப்பாவிடம் போய் சொன்னான்.

அலுவலகத்தில் எல்லோரும் பாராட்டினார்கள் என்று கூறினான். அவர் அவ்வளவு திருப்தியாக அதை எடுத்துக் கொள்ளவில்லை.

“அம்மா, நான் அலுவலகத்திற்கு காலையில் சென்றுவிட்டு மாலையில் லேட்டாக வருகிறேன். உனக்கு உதவியாக ஏதாவது வேலை செய்கிறாளா? மதியம் என்ன செய்கிறாள்? தூங்குகிறாளா? இல்லை டிவி பார்க்கிறாளா? என்ன பண்ணுகிறாள்? நான் அவளிடம் இது பற்றி கேட்பதற்கு முன்பு அவள் தொடர்ந்து என்ன பண்ணுகிறாள் என்று உன்னிடம் கேட்டு தெரிந்து கொள்ளலாம் என்று பார்க்கிறேன்”

“அவள் ஒரு வித்தியாசமான பெண்ணாக இருக்கிறாள். எனக்கு ஓடி வந்து உதவி செய்கிறாள். நானும் அவளும் சேர்ந்துதான் சாப்பிடுவோம். சாப்பிடுவதற்கு காலை சிற்றுண்டி வேண்டாம் என்று சொல்லிவிடுவாள் உங்களுக்கெல்லாம் சிற்றுண்டி பண்ணிவிட்டு உங்களுக்கு சாப்பாடு கட்டிக்கொடுத்தால் மணி 9 ஆகும். அப்பாவும் சாப்பிட்டு விட்டு வெளியே போய்விடுவார் நானும் அவளும் மீதி வேலைகளை

செய்துவிட்டு ஒரு மணிக்கு சாப்பிடுவோம். நான் டிவி பார்த்துக் கொண்டிருப்பேன். அவள் ஏதாவது படித்துக் கொண்டே இருப்பாள். ஏதாவது எழுதுவாள். செல்போனில் ஏதாவது வேலை செய்வாள். நான் கூட என்னம்மா போனை வச்சிக்கிட்டு வேலை செஞ்சுகிட்டு இருக்கே என்று கேட்பேன். ஒன்னும் இல்ல அத்தை உலக விஷயங்கள் எல்லாம் போனில் இப்போது ஈசியாக கிடைக்கிறது. அதைப் பார்த்துக் கொண்டிருந்தால் உலகம் எப்படி செல்கிறது என்று தெரியும். நமது அறிவு தெளிவு பெறும் என்பாள். அவள் மேலும் கூறுவாள் 'அத்தை உங்களுக்கு நான் போனில் எப்படி பார்க்கிறது என்று சொல்லி தருகிறேன். அது ஒன்றும் பெரிய விஷயம் இல்லை. நீங்கள் எல்லாம் இரண்டு நாள் அதில் உட்கார்ந்தால் என்னை விட நன்றாகவே செய்வீர்கள்' என்று ஊக்குவிப்பாள். நான் தான் எனக்கு எதுக்கு கோதை இந்த போன் எல்லாம் என்பேன். செல்போன் உபயோகப்படுத்துவது எவ்வளவு பெரிய விஷயம். அதுவும் நீ சொல்லிக் கொடுத்த பிறகு கொஞ்சம் அதிகமாகவே உபயோகப்படுத்துகிறேன். நான் என் வேலையை நானே பார்த்துக் கொண்டாலே இந்த வயதில் பெரிது என்பேன். அவள் சிரித்துக் கொண்டே "அப்படி இல்லே அத்தை. என் கூட வாருங்கள் நான் ஒரு விஷயம் காண்பிக்கிறேன்" என்பாள். அவள் ஏதோ ஒரு இங்கிலீஷ் காரி பெரிய ஊஞ்சலாடுவதை காட்டுவாள். உண்மையாவே அவள் ஊஞ்சல் ஆடுவதைப் பார்த்தாலே எனக்கு பயமாக இருக்கும். அவ்வளவு உயர்த்திற்குப் போகும். அத்தை அவர் வயது உங்களுக்கு தெரியுமா? என்பாள். எனக்கு எப்படிம்மா தெரியும் என்பேன். அவள் உடனே ஏதோ ஒரு பட்டனை அழுத்தி அதில் பார்த்தால் வயது 84 என்று இருக்கும். அத்தை எதற்கு இதைச் சொல்கிறேன் என்றால் உங்கள் வயது ஒன்றும் தடையில்லை. உங்களுக்கு அப்படி ஒன்னும் வயதாகவில்லை. உங்களுக்கு வயது 62 தான் இன்னும் நீண்ட நாட்கள் நீங்கள் ஆரோக்கியமாகவும் திடமாகவும் இருக்க வேண்டும். அதற்கு உடல்பயிற்சி நிச்சயம் தேவை. புத்தகத்தை படிக்கக் கற்றுக்

கொள்ளுங்கள். புத்தகங்களை நண்பர்களாக்கிக் கொள்ளுங்கள். ஏனென்றால் ஒரு சமயத்தில் நீங்கள் தனியாக இருக்க நேரிடும். அப்போது உங்களுக்கு புத்தகங்கள் தான் நண்பர்கள். புத்தகங்கள் தான் துணை. இப்போது பழகாமல் அப்போது புத்தகத்தை எடுத்தால் புத்தகங்கள் மீது வெறுப்பு வரும். புத்தகங்களிடம் கூட அன்பு பாராட்ட வேண்டும்" அவ சொல்லறதை எல்லாம் பாத்தால் நியாயமாத்தான் தெரியுது மொத்தத்தில் அவள் உனக்கு தேடி கிடைக்காத சொத்து. இதை எல்லாம் எங்கே படிச்சா? எப்படி படிச்சா? அதுதான் ஆச்சர்யம்"

சேகருக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை. என்ன இவ்வளவு திறமையான பெண்ணை. எனக்கு எப்படி கிடைத்தாள்? ஒரு சைக்கிள் சவாரி தன் வாழ்கையில் இவ்வளவு வசந்தத்தை எப்படி கொண்டு வந்தது என்று வியந்தான்,

பாலாயி கோதையிடம் பையனின் வீட்டிற்கு சென்று பையனை பார்த்து பேசியது பற்றி முழு விவரமும் சொல்லி இருந்தார். அப்போது ஹாலில் மாட்டியிருந்த பெரியார் படம் அதைப்பற்றி சேகர் கேட்டது, அதற்கு, ராசநாயகம் சொன்ன விளக்கங்கள் நல்ல வேளையாக சேகரின் தோழி வித்யா வந்து அவர்களை அந்த இக்கட்டான சூழ்நிலையில் இருந்து அதிர்ஷ்டவசமாக காப்பாற்றிய விபரமும் சொல்லி இருந்தார். இருவரும் வாய்விட்டு சிரித்தார்கள். கோதை வுக்கு அந்த விஷயம் மறக்க முடியாத விஷயமாக போய்விட்டது. அது பற்றி அம்மா சொல்லும் பொழுது அதைப் பற்றி சேகரிடம் ஒன்னும் கேட்க வேண்டாம் என்றும் சொல்லியிருந்தார். ஆனால் பெரியார் படம் ஹாலில் இல்லாததையும் கவனிக்கத் தவறவில்லை. இது பற்றி யாரிடமும் எதுவும் கேட்கக் கூடாது என்று தீர்மானமும் செய்து இருந்தாள்.

** * ** ** **

ஆறு மாதங்கள் சென்ற பிறகு அதற்காகவே காத்திருந்தவர் போல் ராசநாயகம் மனைவியிடம், "நமது பெரியாரை ஹாலில் மாற்றி விடலாமா?"

"எனக்கு என்ன சொல்வது என்று புரியவில்லை. ஆனால் ஒன்று பொண்ணு மிகவும் புத்திசாலியாக இருக்கிறாள். சாதாரணமாகத் தென்படவில்லை. அதனால் எப்படி பிரச்சினைகள் வரும்? எப்படி அவள் எடுத்துக் கொள்வாள்? என்று என்னால் சொல்ல முடியவில்லை. ஆனாலும் இது உங்கள் வீடு. உங்கள் விருப்பம் போல் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். ஒன்று மட்டும் கூறுவேன் இதைக் காரணம் காட்டி அவள் வீட்டை விட்டு தனியாகப் போகக்கூடாது. இது என் விருப்பம். மேலே நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள்.

"அவர்கள் அப்பா அம்மா வந்தபோது பெரியார் படம் இருந்தது. அதைப் பற்றிக் கூட அந்தப் பையன் விவாதித்தானே. நல்ல வேளை நான் பெரியார் படத்தில் அருகில் உள்ள பிள்ளையார் படத்தை எடுக்க வைத்தேன். இல்லையென்றால் என்ன நடந்திருக்கும்? என்று என்னால் கூற முடியாது. அந்த பையன் பெரியார் படத்தைக் கேட்டான். பெரியார் நீங்க சொல்லிட்டீங்க. பக்கத்துல பிள்ளையார் எதுக்கு வச்சிருக்கீங்க? அப்படின்னு கேட்பான். கேட்டா என்ன சொல்லியிருப்பிங்க?

"நீங்க வெளியே போகும் போது பெரியாருக்கு ஒரு வணக்கம் போட்டுட்டு பிள்ளையார் படத்தை ஒரு அடி அடிச்சிட்டு போவேன்னு சொல்லி இருந்தால் இந்த கல்யாணம் நின்று போவதற்கு வாய்ப்புகள் அதிகம். நல்ல வேளை அதை நான் தடுத்து விட்டேன். ஏதோ தற்செயலாக தடுத்து விட்டேன்"

“இப்படி ஏதாவதுக் கூறிக்கொண்டு என்னை முழுவதுமாக மாற்ற முயற்சிக்கிறாயா?” என்ற நேர் கேள்வி சந்திராவால் தாங்க முடியவில்லை.

“என்ன இப்படி பேசுகிறீர்கள்? உங்களை மீறி நான் ஏதாவது செய்திருக்கிறேனா? நீங்கள் கோவிலுக்கு போகக்கூடாது என்று சொன்னதற்காக நானும் எத்தனை வருடங்கள் கோவிலுக்கு போகாமல் திருவிழாவிற்கும் போகாமல் வீட்டிலேயே அடைந்து கிடந்திருக்கிறேன். நான் சொல்வது இதுதான் போட்டோவை மாட்டலாம். அந்தப் பெண் என்ன செய்வாள் எப்படி எதிர்கொள்வார் என்று தெரியாது. சேகர் அந்தப் பெண்ணை மிகவும் நேசிக்கிறான். நீங்களே சொல்லுகிறீர்கள். அந்த பொண்ணு ஒரு வித்தியாசமான பொண்ணு ஒரு சுய சிந்தனையாளர் என்று பல விதங்களில் பார்த்து விட்டோம். என்ன இதுவரையில் உங்களுக்கு பிடிக்காது என்பதற்காக எந்த கோவிலுக்கும் போய் வருகிறேன் என்று சொன்னதில்லை. என்னையும் வற்புறுத்தி வரச் சொல்லவில்லை. அவர்கள் வீட்டில் நடக்காத பெருமாள் பண்டிகை விழாவா? பெருமாள் உற்சவங்களா? ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. அவள் வீட்டுக்குப் போக வேண்டும் என்று சொல்லவும் இல்லை. பெருமாளுக்கு இந்த விழா அந்த விழா என்று நம்மை அழைத்ததும் இல்லை. மிகவும் கவனமாக நடந்து கொள்கிறாள். அனாவசியமாக நம்மால் பிரச்சனைகள் உண்டு பண்ண வேண்டாம் என்று நான் நினைக்கிறேன். அதற்குப் பிறகு உங்கள் விருப்பம். என்ன நடக்க வேண்டுமோ அது நடக்கும். அதை தடுப்பதற்கு நம்மால் முடியாது என்று நான் உணர்ந்து கொண்டு பல வருடங்கள் ஆகிவிட்டன.”

அடுத்த நாள் பெரியார் ஹாலில் அமர்ந்து இருந்தார்.

அம்மாவிடம் பேசும் போது, “அம்மா நீ பையனைப் பார்க்க அவர் வீட்டிற்கு வந்து இருந்தாயே அப்பொழுது ஹாலில் என்னென்ன படங்கள் இருந்தன” என்று கோதை பொதுவாக கேட்டாள்.

“பெரிதாக ஒன்றும் இல்லை முக்கியமாக சாமி படம் இல்லவே இல்லை பெரியார் படம் பெரிதாக இருந்தது அதன் அருகில் உனது மாமனார் மாமி மாமனார் குடும்பத்து பெரியவர்கள் படம் ஒரு குரூப் போட்டோ இருந்தது அவ்வளவுதான் வேறு ஒன்றும் பார்த்ததாக ஞாபகம் இல்லை இல்லை இப்போ இப்போது அதற்கு ஏன் கேட்கிறாய்”

“நான் வந்தபோது பெரியார் படம் இல்லை. இப்போது வந்திருக்கிறது. அது பற்றித்தான் கேட்டேன். நான் பார்த்துக்கிறேன். நீ கவலைப்படாதே”.

சந்திரா “கண்ணபிரான் வந்த நாளில் நடந்த நிகழ்ச்சியை மீண்டும் விவரித்து அது பற்றி நகைச்சுவையுடன் அப்பாவிடம் இந்த போட்டோ இங்க இருக்க வேண்டாம் யாராவது உறவினர்கள் வருவார்கள். ஏதாவது இக்கட்டான சூழ்நிலை வரும் என்று சொல்லி அப்பாவிடம் இந்த போட்டோவை உங்கள் அறையில் மாற்றிக்கொள்ளுங்கள். பெண் பெருமாள் பக்தை. அவள் உறவினர்கள் வந்து ஏதாவது பிரச்சினை வரும். பொண்ணு சந்தோஷமா குடும்பம் நடத்த ஆரம்பிக்கணும். இந்தப் பெரியாரை திருமணம் முடிந்து ஒரு 6 மாதமாவது அவருடைய அறையில் வைக்க சொன்னேன் இப்போது திருமணம் முடிந்து 6 மாதம் ஆகி விட்டது அவரே பெரியார் படத்தை ஹாலில் மாட்டி விட்டார்.”

அது பற்றி விளக்கம் தானாக வந்தது பற்றி தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

இரண்டு நாள் கழிந்தது ஹாலில் ஒரு பெரிய பிள்ளையார் படம் புதிதாக பெரியார் படத்திற்கு அருகில் முளைத்திருந்தது

அதைப்பற்றி சேகரிடம் கேட்கலாமா இல்லை மாமியாரிடம் கேட்கலாமா இல்லை யாரிடம் கேட்கலாம் இல்லை அவர்களாக சொல்வார்களா இல்லை நான் கேட்டாகவேண்டுமா? ஒன்றும் புரியவில்லை. சரி ஒன்றும் பேசாமல் காத்திருப்பது இன்ரூ முடிவு செய்தாள்.

அம்மாவிடம் பேசும் போது இந்த போட்டோ பற்றி பேசக்கூடாது என்றிருந்தாள். அம்மாவே பெரியார் படம் பற்றி கேட்டபோது "இல்லையம்மா ஒரு பிள்ளையார் படம் பெரியார் படத்திற்கு அருகில் வந்து இருக்கிறது. என்னை திருப்திப் படுத்துவதற்காக இந்தப் பிள்ளையார் படத்தை இன்று இங்கு வைத்தார்களா? இல்லை எதற்காக வைத்தார்கள்? என்று தெரியவில்லை. என்னைத் திருப்தி செய்ய வேண்டுமென்றால் பெருமாள் தானே வரவேண்டும்? பிள்ளையார் வந்திருக்கிறாரே? ஒரே குழப்பமாக இருந்தது. நல்லவேளையாக யாரிடமும் கேட்கவில்லை அவர்களாக சொல்வார்களா? இல்லை நாம் யாரிடம் கேட்பது என்று தயக்கம். பொதுவாக இந்த மாதிரி தயக்கம் வரும்போது நேரம் கொடுங்கள். நீங்கள் ஒன்றும் குழம்பிக் கொள்ள வேண்டாம் அதுவாகத் தெளிவாகும் என்று சொல்லுவார்கள். நீ கவலைப் படாதே. நான் பார்த்துக்கொள்வேன்."

கோதையின் புதுக்குழப்பத்தை அம்மாவுடன் பகிர்ந்து கொணடாள்.

"நீ அவசரப்படாதே எல்லாம் பார்த்துக் கொள்ளலாம். பெருமாளிடம் விட்டுவிடு"

மறுநாள் பெரியார் படத்திற்கு மாலை வந்தது. பிள்ளையார் படத்திற்கு மாலை இல்லை. அவள் அதுபற்றி கவனித்தாகக் காண்பித்துக் கொள்ளவில்லை.

சேகர் இரவு படுக்கை அறையில் "ஹாலில் மாற்றங்களைக் கவனித்தாயா?"

"அது என் வேலை இல்லை"

"ஏன் கோதை இப்படி பேசுகிறாய் நான் உன்னுடைய அறிவுக் கூர்மையையும் உலக அனுபவங்களையும் பெரிதாக மதித்து உன்னுடைய கருத்துக்களை என் வீட்டு எல்லா விஷயங்களிலும் மதித்து கேட்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். நமக்கு திருமணமாகி 6 மாதங்கள் ஆகிவிட்டன. இத்தனை நாள் என் வீட்டில் நானும் என் அம்மாவும் அப்பாவை வற்புறுத்தி ஹாலில் மாட்டியிருந்த பெரியார் படத்தை அவருடைய ரூமில் மாட்ட கேட்டு இருந்தோம் அவரும் அதன்படி செய்து விட்டார் கல்யாணம் ஆகி 6 மாதங்கள் ஆனவுடன் அவர் அந்தப் பெரியார் பிள்ளையார் படத்தை எடுத்து ஹாலில் மாட்டி விட்டார். உனக்கு எனக்கு ஏதாவது கஷ்டமாக இருக்குமோ என்று நானும் அம்மாவும் விவாதித்தோம். அம்மா உன்னையே கேட்கச் சொல்லி விட்டார். அதனால் தான் கேட்கிறேன்."

"என்னை மதித்துக் கேட்டதற்கு மிகவும் நன்றி. நான் இதற்கு என்ன பதில் சொல்லுவேன் என்று எதிர்பார்க்கிறீர்கள்? இல்லை என்று பதில் சொன்னால் உங்களுக்கு மகிழ்ச்சி அளிக்கும்?"

"என்ன கோதை இப்படி கேட்கிறாய்? உனக்கு எது மனதில் படுகிறதோ அது தாராளமாக சொல்லலாம். எனக்குப் பிடிக்க வேண்டும் என்பதற்காக எதையும் சொல்வது அவசியம் இல்லை"

"நீங்கள் இப்படி வற்புறுத்தி கேட்பதினால் நான் என் மனதில் உள்ளதைச் சொல்கிறேன் உங்களுக்குச் சரி என்று பட்டால் எடுத்துக் கொள்ளுங்கள். உங்களுக்குச் சரி என்று படவில்லை

என்றால் நான் சொல்லவில்லை என்று எடுத்துக் கொள்ளுங்கள். இது இந்த வீடு உங்கள் தந்தையின் வீடு. உங்கள் தந்தையின் வீட்டில் அவர் என்ன படம் மாட்ட வேண்டும் எப்படி மாட்ட வேண்டும் என்று சொல்வதற்கு உங்களுக்கே உரிமை இல்லை. உங்களுக்கே உரிமையில்லாத போது உங்களைத் திருமணம் செய்து வந்த எனக்கு எந்தவித தார்மீக உரிமையும் கிடையாது."

"என்ன கோதை இப்படி எதிலும் சம்பந்தமில்லாமல் போல் பேசுகிறாயே. நான் வீட்டில் நடக்கும் ஒவ்வொரு விஷயங்களுக்கும் உன்னுடைய கருத்துக்களைக் கேட்க ஆசைப்படுகிறேன்."

"தப்பா நினைக்காதீர்கள் இந்தக் கருத்தைப் படத்தை மாற்றுவதற்கு முன்பு என்னை கேட்டிருக்க வேண்டும். படத்தை மாட்டி விட்டீர்கள். என் கருத்து எதற்கு? இதை நான் ஒத்துக் கொள்ள போவதில்லை. என்ன செய்வதாக உத்தேசம்?"

"தெரியவில்லை"

"உங்களுக்கு ஏதாவது தீர்வு தெரிகிறதா? எனக்கும் தெரியவில்லை"

"என் அப்பாவுக்கும் பல நாள் பல வருடங்கள் பழக்கம் இதை அவர் எப்படி ஒத்துக்கொண்டு ஏற்றுக் கொள்வார் என்று தெரியவில்லை."

"நான் வேண்டுமானால் பேசவா?"

"ஐயோ வேண்டாம் தாயே. இரண்டு நாள் பொறுத்துக் கொள்."

அம்மாவிடம் போய் "அம்மா இன்று கோதை இந்த பிள்ளையார் படத்தைப் பற்றி கேட்டாள். அவளிடம் அப்பா வழக்கமா செய்யும் செயலைப் பற்றி சொல்லிவிட்டேன். அவளுக்கு

அதில் மனம் வருத்தம் தெளிவாக தெரிந்தது. அவள் சொன்ன ஒரே வார்த்தை மற்ற எவரையும் நான் வணங்கும் கடவுளை மதிக்கச் சொல்லுவதற்கு எனக்கு உரிமை கிடையாது. ஆனால் நான் வணங்கும் கடவுளுக்கு ஒரு அவமதிப்பு நேரும் போது அதை தட்டிக் கேட்கும் தார்மீக கடமை இருக்கிறது என்று கூறுகிறாள். அவள் கூறுவதிலும் ஒரு நியாயம் இருப்பதாகத்தான் தெரிகிறது. 20 வருடங்களாக கோவிலுக்கு போய் சாமி கும்பிடும் அவள் திருமணம் செய்த காரணத்திற்காக ஆறு மாதங்களாக எந்த கோவிலுக்கும் வந்த திருவிழாவிற்கும் சென்றதில்லை. நம்மையும் அழைத்ததில்லை. அவள் அவளுடைய வழக்கமான பழக்கத்திலிருந்து வெளியே வந்து நமக்காக சில செயல்களை செய்யும் பொழுது அவளுக்காக ஏதாவது செய்தே ஆக வேண்டும் "

"உன் அப்பாவிடம் இது பற்றி நான் பேசுவேன் இரண்டு வழிகள் தான் உண்டு. ஒன்று உன் அப்பா பழையபடி பெரியார் பிள்ளையார் படத்தை அவருடைய அறைக்குள் வைத்துக் கொள்வது. அவர்கள் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகள் எதுவும் அவருடைய அறைக்குள் செய்யலாம். பொது இடத்தில் அவ்வாறு செய்வது நியாயம் இல்லை என்று எடுத்துக் கூறுவேன்."

"அப்படி அப்பா ஒத்துக்கொள்ளவில்லை என்றால் என்ன பண்ணுவது அம்மா?"

"ஏன் அந்த மாதிரி நினைக்க வேண்டும். அவர் ஒத்துக் கொள்வார் அப்படி ஒத்துக்கொள்ளவில்லை என்றால் சேகரும் கோதையும் தனியாக நம்மை விட்டுப் போய் விடுவார்கள். வயது காலத்தில் நாம் தனியாக திண்டாட வேண்டும் என்ற எதார்த்தத்தை சொல்லி வைப்பேன். சேகருக்கு கோதையை பிடித்து விட்டது. அவளுக்காக அவன் எதுவும் செய்யத் தயாராக இருக்கிறான். இந்தச் சமயத்தில் கோதைக்கு விருப்பம் இல்லை என்றால் அவள் விருப்பத்திற்காக தனியாகப் போகத் தயங்க மாட்டான் என்று

உண்மை நிலையை சொல்லிவிடுவேன். இப்போதெல்லாம் கல்யாணம் ஆனவுடனேயே பல பிள்ளைகள் தனிக்குடித்தனம் போகிறார்கள். இந்த பெண் அதுமாதிரி எதுவும் கேட்கவில்லை. நல்ல பெண் நாம் கொஞ்சம் வீட்டுக்கொடுத்தே ஆகவேண்டும் என்று தீர்மானமாக சொல்லிவிடுவேன் "

"என்னம்மா என்னை மாட்டி விடுகிறீர்கள்"

"நீயே சொல்லு சேகர். அப்பாவும் பிடிவாதம் பிடித்து உன் மனைவியும் பிடிவாதம் பிடித்தால் உலக நியதிப்படி நீ மனைவி பக்கம் தான் நிற்க வேண்டும். அவள் உன்னை நம்பி பெற்றோரை விட்டு உனக்காக வந்தவள். அடுத்தபடியாக அவள் உனக்கு கிடைப்பதற்கு அறிய சொத்து. மிகவும் கெட்டிக்காரி. வாழ்க்கை எப்படி நடத்த வேண்டும் என்பதை அவளை விட சிறப்பாக யாரும் கூற முடியாது. அவள் பேச்சைக் கேளு. அவள் உன்னை நல்ல வழியில் நடத்திச் செல்வாள்."

"சரிம்மா பாத்துக்கோ. முடிந்த வரையில் அப்பாவை அவரது அறையிலேயே வைத்துக் கொண்டு பெரியாரை கும்பிடச் சொல். அவள் சொல்லும் படி பெரியாருக்கு மாலை போடுவதில் அவளுக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லை. ஆனால் பிள்ளையாருக்கு அவமரியாதை செய்வது என்பது ஒத்துக்கொள்ளக் கூடியதாக இல்லை. இதில் எனக்கேகூட சம்மதம் இல்லை. பெரியாரும் மற்றவர்கள் மனது புண்படாது இருக்க வேண்டும். அப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று சமயங்களில் சொல்லுவார். இதை அவருக்கு விளக்கிச் சொல்லி பெரியார் படத்தை அவர் அறைக்குள் வைக்குமாறு செய்து விடு."

அம்மா அப்பாவுடன் என்ன பேசினாரோ தெரியாது. பெரியாரும் பிள்ளையாரும் அப்பாவின் ரூமுக்குள்ளே ஐக்கியம் ஆகி விட்டார்கள்.

சேகருக்கு நிம்மதி வந்தது

“என்ன கோதை பிரமாதமாய் சாதித்து விட்டாய்? உனக்கு வெற்றி விழா கொண்டாட வேண்டும்.”

“எனக்கா? வெற்றியா? என்ன சொல்கிறீர்கள். புரியவே இல்லையே”

“உண்மையாக புரியவில்லையா? புரியாதது மாதிரி நடிக்கிறாயா? நீ விஷயம் அறிந்தவன். உன்னை எல்லாம் என்னை மாதிரி சாதாரண ஆட்கள் எடை போட்டு விடமுடியாது.”

“உண்மையைச் சொல்லுங்கள். எனக்கு ஒன்றுமே புரியவில்லை”

“என்னம்மா உன் பேச்சைக் கேட்டு என் அப்பா இத்தனை வருடங்களாக ஹாலில் மாட்டி இருந்த பெரியார் படத்தை அவர் ரூமுக்குள்ளே கொண்டு போய் மாட்டி விட்டாரே. இது உனக்கு பெரிய வெற்றியாத் தெரியவில்லையா?”

“எல்லோரும் செய்யற தப்பு மாதிரி தான் நீங்களும் செய்கிறீர்கள்.. அவருடைய பண்பு என்னை பாராட்ட வைக்கிறது. அவருடைய பெருந்தன்மை, இந்த வயதிலும் உண்மையை, சத்தியத்தை ஏற்றுக்கொள்ளும் பக்குவம் என்னை வியக்க வைக்கிறது. உண்மையாகவே மிகவும் பாராட்டப்பட வேண்டியவர் அவர் தான்.”

“என்ன எதற்கு எடுத்தாலும் ஏதாவது வித்தியாசமாக சொல்லி என்னை வியப்பில் ஆழ்த்துகிறாய்.”

“நீங்களே பொறுமையாக யோசனை செய்து பாருங்கள். நான் யார்? அவர் வீட்டு மருமகள். அவர் எனக்கு தந்தை உறவு. அவர் சொல்லி நான் கேட்க வேண்டியவள். அவரிடம் எந்தக் காரணமும் கேட்காமல் அவர் சொல்லுவதை அப்படியே செயல்படுத்தக்கூடிய

நிலையில் நான் இருக்கிறேன். அவர் யார்? எனது தந்தை ஸ்தானத்தில் இருக்கிறார். அவர் எதற்கு என் பேச்சுக்கு செவிமடுக்க வேண்டும்? எனக்காக எதற்கு இந்த கொள்கைகளை விட்டுத்தர வேண்டும்? உனக்கு ஒன்றும் தெரியாது. உன்னை விட வயதில் மூத்தவன். அனுபவம் பெற்றவன். நீ என் மருமகள். நீ சும்மா இரு என்று ஒரே போடு போட்டு என் வாயை அடைத்து வைக்கலாம். அவர் செய்யவில்லை.

'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்பொருள் காண்பது அறிவு.'என்ற திருவள்ளுவர் வாக்குப்படி வயது, அனுபவம், பதவி, தகுதி, எல்லாவற்றையும் பின் தள்ளி என் கருத்துக்கு மதிப்புக் கொடுத்தவர் இல்லையா?

எனது தர்க்கத்துக்கும் அதில் உள்ள லாஜிக்கையும் உணர்ந்து கொண்டு இந்த வயதில் தன்னை மாற்றிக் கொண்டவர். தான் பிடித்த முயலுக்கு மூணு கால் தான் என்று வாதம் செய்யாதவர். இப்போது சொல்லுங்கள் யார் பாராட்டுக்குரியவர்? நானா? இல்லை உங்கள் தந்தையா?"

"தந்தைதான்"

"என்னுடைய உணர்ச்சிகளுக்கு மதிப்பு கொடுத்து இந்த வீட்டில் நான் விரும்பிய மாற்றம் செய்வதற்கு செய்ததற்கு மிகவும் நன்றி. உங்கள் அப்பாவிடம் என்னுடைய நன்றியைச் சொல்லிவிடுங்கள். ஒரு நல்ல செயல் செய்தால் அது யார் செய்தாலும் அது பாராட்டப்பட வேண்டியது. பொதுவாக நம் உறவினர்கள் அந்த நல்ல செயலைச் செய்தால் நாம் பாராட்டத் தவறி விடுகிறோம். இது எப்படியோ இந்திய கலாச்சாரத்தில் நுழைந்துவிட்டது. யாரைப் பாராட்டுகிறோம் என்பது முக்கியமில்லை எதைப் பாராட்டுகிறோம் என்பது தான் முக்கியம் அதை நாம் உணரத் தவறி விட்டோம்"

“எப்படி எல்லாவற்றிற்கும் ஒரு செய்தி வைத்திருக்கிறாய்?”

சேகர் அவளது அறிவைப் பார்த்து வியந்தான்,

இந்த விஷயத்தை மறுநாள் அப்பாவிடம் சொன்னார். அவர் அப்பா அடே அப்பா என்ன மாதிரி வித்தியாசமான சிந்தனை.

திருமணம் நடந்து வருடங்கள் ஓடின. முதல் திருமண நாளில் விசேஷமாக கொண்டாடினார்கள். அருகிலுள்ள ஒரு சுற்றுலா தலத்துக்கு சென்று தம்பதிகளாக கொண்டாடினார்கள்.

“உனக்கு ஏதாவது கோவிலுக்கு போக வேண்டுமா?” என்று கேட்டான் சேகர்

“அப்படி ஒன்றும் இல்லை. போனால் நல்லது. அதற்காக உங்களிடம் போராடாமல் இருந்தால் மிகவும் நல்லது. என் பெருமாள் எப்போதும் என் கூடத்தான் இருக்கிறார்”

இரண்டு வருடங்களில் எத்தனையோ பண்டிகைகள் எத்தனையோ திருவிழாக்கள் வந்து போயின. முதல் தீபாவளி என்று மட்டும் கண்ணபிரான் வீட்டிற்கு சென்று புதுப்புது உடைகளை வாங்கிக்கொண்டு கொண்டாடினார்கள். யாரும் அதுபற்றி மூச்சு விடவில்லை.

விளையாட்டுப் போல் 7 வருடங்கள் ஓடிவிட்டன. அவளும் கடவுள் இல்லை குடும்பத்துடன் வாழ பழகிக்கொண்டாள். ராசநாயகமும் தன பிடிவாதத்தை கொஞ்சம் குறைத்துக்கொண்டார் என்று சொல்லத்தான் வேண்டும்..

ஏதோ கட்சி மாநாட்டுக்கு தலைவர் குடும்பத்துடன் வர வேண்டும் என்று அழைப்பு விடுத்திருந்தார். ராசநாயகம் கொஞ்சம் நெளிந்தார். பெருமாள் வீட்டு பெண் எப்படி வருவாள்? அவள் வரவில்லை என்றால் மாநாட்டில் நண்பர்களிடம் என்ன சொல்வது? எப்படி சமாளிப்பது? என்று குழம்பினார். நண்பர்கள்

பையனுக்கு திருமணம் ஆகிவிட்டது. மருமகளை அழைத்து வரமுடியவில்லை என்று சொல்லமுடியுமா?

சேகர் தான் அப்பாவிடம், “அப்பா நம்மளே என் குழம்பணும்? அவளிடம் கேட்கிறேன். நமக்காக எவ்வளவு விட்டுக் கொடுத்திருக்கிறாள். எதற்காகவும் பிடிவாதம் பிடித்ததில்லை. எதுவுமே கேட்டதில்லை. இப்பவும் நான் கூப்பிட்டேன் என்பதற்க்காக வரலாம். நான் கூப்பிட்டுப் பார்க்கிறேன். எனக்காக வரலாமில்லையா?”

சேகர் அவளை மாநாட்டிற்குக் கூப்பிட்ட போது அவள் ஓகே என்றதும் சேகர் குடும்பம் திகைத்தது.

சேகரின் அம்மா மட்டும் “டே சேகர். அவளை ஜாக்கிரதையாய் பாத்துக்கணும். அவருக்கும் சிறிது அதிர்ச்சியாகவே இருந்தது. நான் அவளை பாத்துக்கொண்டு ஒரு ஓரத்தில் எங்கேயாவது இருந்து விடுகிறேன்” என்று சொன்னார்.

மாநாட்டுக்கு செல்வதற்கு அப்பாவுடன் தயாரான பொழுது அவளும் தயாராகவே இருந்தாள். அவள் தனக்கும் தன் குடும்பத்திற்கும் தேவையான தண்ணீர், துணி விரிப்புகள், செல்போனை சார்ஜ் செய்யும் சார்ஜர் மற்றும் ஒரு பெரிய நோட்டு, மற்றும் படிக்க சில புத்தகங்கள், சில பேனாக்கள், நேர்த்தியாய் சீவப்பட்ட பென்சில்கள் வெகு நேர்த்தியாக பேக் செய்து ஒரு அழகான கைப்பையில் வைத்திருந்தாள்.

ராசநாயகம் அவளிடம் “என்னம்மா நம்ம பள்ளிக்கூடத்துக்கா போறோம்? எதுக்கு புத்தகம், நோட்டு, பேனா, பென்சில் எல்லாம்?. மாநாட்டுக்குப் போகிறோம். அங்கே தலைவர்கள் பேசுவார்கள். அதைக் கேட்கப் போகிறோம்.” என்று சொன்னார்.

அதற்கு அவள் அமைதியாக “அப்படி இல்லை மாமா நம் ஏதாவது கூட்டத்துக்கு போனால் அங்கு ஏதாவது முக்கியமான

விஷயங்கள் சொல்வார்கள். நாம் அதை நோட்டுப் புத்தகத்தில் குறித்துக் கொண்டு வந்தால் நமக்கு உபயோகமாக இருக்கும். மேலும் ஓர் மாநாட்டுக்குப் போகும்போது அதற்காக கணிசமான நேரத்தை ஒதுக்குகிறோம். பணமும் சிலவு செயகிறோம். யாராவது பெரியவர்கள் பேசுவார்கள். அவர்கள் பேசுவதில் உள்ள நல்ல விஷயங்களை குறித்துக்கொண்டால் நமது வாழ்க்கைக்கு நன்றாக இருக்கும். மேலும் நாம் நாம் செலவு செய்த நேரத்திற்கு ஒரு முழு பயன் கிடைக்கும்."

உண்மையிலேயே இந்த விளக்கத்தைக்கேட்டு ராசநாயகம் பயந்துபோனார்.

"பரவாயில்லையே. நாங்களெல்லாம் கூட்டத்துக்கு போவோம். தலைவர் பேசுவார். பாட்டெல்லாம் போடுவார்கள். நாங்கள் பாட்டுக். கேட்டுவிட்டு பேச்சைக் கேட்டுவிட்டுக் கொடுக்கும் உணவுப் பொட்டலங்களை வாங்கி சாப்பிட்டுவிட்டு வருவோம். உன்னுடன் வருவதே ஒரு வித்தியாசமான அனுபவமாக இருக்கும் என்று நினைக்கிறேன். நல்லது. வருகிறேன் என்று சொன்னபோது எங்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. மேலும் இது மாதிரி ஒரு ஒரு கூட்டத்திற்கு வரும்பொழுது ஒரு ஏற்பாடு செய்வது மிகவும் நல்லது. சரி நாம் போகலாம்" புறப்பட்டார்

மாநாட்டிற்கு சேகர், கோதை, ராசநாயகம், சந்திரா நால்வரும் சென்றார்கள்.

அவள் மட்டும் மாநாட்டுப் பந்தலில் கட்டியிருந்த பதாதைகளை கவனமாக தன்னுடைய செல்போனில் அழகாக பதிவு செய்து கொண்டிருந்தாள்.

அவர்கூட "என்னம்மா இங்கே என்ன பண்ணிக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

அவளுடைய நடவடிக்கைகள் அவருக்கு வித்தியாசமாக பட்டது.

“இல்லை. இந்த பதாதைகள் நாம் படிப்பதற்காகத் தான் வைத்திருக்கிறார்கள். அதை நாம் படிக்க வேண்டும். ஆனால் படிப்பதற்கு இப்போது நேரமில்லை. அதனால்தான் அதை என்னுடைய செல்போனில் எடுத்துக்கொள்கிறேன்.”

அவருக்கு அவள் செய்கைகள் எல்லாமே ஆச்சரியமாக இருந்தது.

“என்ன புள்ள நாங்களெல்லாம் பல வருஷமா இந்த மாதிரி மாநாட்டுக்கு வருவோம். ஒருத்தர் கூட இது மாதிரி பண்ணினது இல்லையே.”

“இல்லை மாமா, நாடு வளர்ந்து கொண்டிருக்கிறது. நாமெல்லாம் முன்னேறிக் கொண்டிருக்கிறோம். பழைய மாதிரியே சென்று வருவதற்கு நாம் ஒன்றும் ஆட்டுமந்தை இல்லை. சிந்திக்க வேண்டும். படிக்க வேண்டும்.”

“அத விடு. நீ படிச்ச புள்ள. போகப்போக உனக்கு தெரியும் “ என்று அந்தப் பேச்சுக்கு முடிவு கட்டினார்.

மாநாட்டில் யார் யாரோ பேசினார்கள். இந்தப் பெண் மட்டும் ஒரு நோட்புக் எடுத்து வைத்துக்கொண்டு இந்தப் பேச்சில் தலைவர்கள் பேச்சில் குறிப்பெடுக்க தொடங்கினாள். அவருக்கு இதுவும் வித்தியாசமாக இருந்தது.

“என்னம்மா நீ ஏதோ ஸ்கூல் குழந்தை மாதிரி எழுதிகிட்டே இருக்கே?” என்று கேட்க,

“இல்லை மாமா. என்ன பேசுகிறார்?” என்று குறிப்பு எடுத்துக் கொள்கிறேன் அவர் என்ன சொல்கிறார்? என்னமாதிரி சொல்கிறார்? எப்படி மேல்கோள் காட்டுகிறார்? அவர் சொல்வதில் என்ன நியாயங்கள் இருக்குன்னு பாக்கணும்?”

“ஏதோ வந்தோமா? ஏதோ பாத்தோமா? ஏதோ பேச்சு கேட்டோமா? ஊருக்கு போனோமான்னு இருக்கணும்?” என்றார் ராசநாயகம்.

“அப்படியே போகக் கூடாது. ஒருவர் என்ன சொல்கிறார்? என்ன கருத்தை புதிதாக சொல்லுகிறார்? என்பதைக் கவனிக்க வேண்டும். அப்படித்தான் என்னுடைய ஆசிரியர் என்னிடம் சொல்லி இருக்கிறார். நான் அவருடைய வார்த்தைகளை எப்போதும் பின்பற்றுவேன். உங்கள் மகன் கவனித்து இருப்பார். தினமும் படுக்கும் முன் நான் என்ன செய்தேன்? என்ன நன்மை யாருக்கு செய்தேன்? என்ன தீமை யாருக்கு செய்தேன்? என்று தினமும் எழுதிவிட்டு இறைவனிடம் யாருக்கும் எப்போதும் தீமை செய்யாத மனம் எனக்குக் கொடு என்று வேண்டி அன்றய நாளை நன்றாக நடத்தியத்திற்கு நன்றி சொல்லிவிட்டு படுப்பேன்”.

“சரிம்மா வித்தியாசமான பொண்ணா தெரியுறே நீ. ஆனா மொத்தத்துல ஒன்ன உங்க அப்பா அம்மா நல்லாவே வளர்ந்து இருக்காங்க. அது மட்டும் நிச்சயம்.”

அவள் குனிந்து மும்மரமாக எழுதிக் கொண்டிருப்பதை சேகர், ராசநாயகம், சந்திரா எல்லோரும் ஏதோ வேடிக்கை பார்ப்பது போல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஏன்? அந்த பக்கம் போகிறவர்கள் கூட ஏதோ இந்த பொண்ணு வித்தியாசமாக எழுதிக் கொண்டிருக்கிறதை சற்று நின்று பார்த்துவிட்டு சென்றார்கள்.

முதலில் இரண்டு பேர் பேசினார்கள். அவர்கள் பேசி முடிந்தவுடன் வேறு ஒருவர் பேச வந்தார். கோதை எழுதுவதை நிறுத்திவிட்டு சற்று நிதானமாக உட்கார்ந்தாள். சிறிது நேரம் கழித்து நோட்டையும் பென்சிலியும் வைத்துவிட்டு அவர்கள் பேசுவதை சுவாரஸ்யம் இல்லாமல் கேட்டாள்.

சேகர் "என்ன கோதை எழுதி முடித்து விட்டாயா? இல்லை கை வலிக்கிறதா?" என்று கேட்டான்.

"புதிய விஷயம் ஒன்றும் இல்லை திருப்பித் திருப்பி ஒரே விஷயத்தைப் பேசுகிறார்கள். ஒருவர் பேசினதையே மற்றவர்களும் திருப்பித் திருப்பி ஏன் பேசுகிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை. ஏதோ நேரத்தைக் கடத்துவதற்காக இவர்கள் பேச்சாளிகளாக வந்திருப்பார்களோ என்ற எண்ணம் எனக்குள் வருகிறது.

நல்ல வேலையாக பேச்சுக்கள் நிறுத்தப்பட்டன. பாடல்கள் போடப்பட்டன எல்லோரும் கேண்டினை நோக்கி சென்றார்கள். கேன்டீனில் பலவித உணவுப் பொருட்கள் வைக்கப்பட்டிருந்தன. சில உணவுப் பொருட்களை வாங்கிக் கொண்டார்கள். அவர்கள் கிளம்பினார்கள்.

"கிளம்பும்போது என்ன மாநாடு நடத்துகிறார்கள். எல்லோரும் சாப்பிட்டு விட்டு அப்படியே இலையையும் பேப்பர்களையும் அங்கங்கே போட்டுவிட்டு போகிறார்கள். இவைகளை போடுவதற்கு குப்பைத்தொட்டிகள் எங்கேயுமே வைக்கவில்லை. இது எல்லாம் எல்லாம் மாநாடு நடத்துபவர்கள் பார்க்க மாட்டார்களா?" என்று சேகர் அப்பாவிடம் கேட்டாள்.

ராசநாயகம், "அம்மா நீ புதுமைப் பெண்ணாக தெரிகிறாய். நாங்கள் எல்லாம் வருவோம். அவர்கள் ஏதோ பேசுவார்கள். நாங்க பேச்சு கூடக் கேட்க மாட்டோம். எங்கள் தலைவருக்கு எங்கள் எண்ணிக்கையை காட்டுவோம். முன்னெல்லாம் சாப்பாடு இலவசமாத் தருவார்கள். அதைச் சாப்பிட்டு விட்டு போக வேண்டியதுதான். சாப்பாட்டுக்கு டிபனுக்கு எல்லாம் இப்போ காசு குடுக்கவேண்டி இருக்கு. மற்றபடி இடத்தை சுத்தம் செய்வதற்கு

மாநாட்டு பந்தல் பிரிப்பவர் செய்தால்தான் உண்டு. நாங்கள் கண்டுக்க மாட்டோம்.” என்றார்.

“நான் வேணா இப்போது சுத்தம் செய்யவா?”

இதை கேட்டு அதிர்ந்தார் ராசநாயகம்.

“அம்மா நீ அந்த மாதிரி எதுவும் செய்யவேண்டாம். சேகர் சீக்கிரம் சாப்பிட்டுவிட்டு நாம் போகலாம்”

அவள் வேறு எதாவது செய்து இல்லை யாரிடமாவது எதையாவது சொல்லி விடுவாளோ என்று பயந்தார்.

ஒரு வழியாக மாநாட்டை முடித்துக்கொண்டு எல்லோரும் வீடு திரும்பினர். சேகருக்கும் சந்திராவிற்கும் பெரிய நிம்மதி வந்தது. அவர்களுக்கு உள்ளுக்குள் கோதை மாநாட்டில் அப்பாவிடம் எதையாவது கேட்டு விடுவாளோ? இல்லை மாநாட்டு பந்தலில் வேறு யாரிடமாவது எதையாவது பேசி விடுவாளோ? என்ன பேசுவாளோ? என்ற கவலை மிகுதியாக இருந்தது. எதுவும் நடக்காமல் வீடு திரும்பியது நல்ல மகிழ்ச்சியை அளித்தது.

வீட்டுக்கு வந்து சில நாட்கள் சென்றன.

ராசநாயகம் “என்னம்மா. மாநாட்டில் நீ எதோ எழுதிக் கொண்டிருந்தாயே. அது என்னாயிற்று?

“நான் சொன்னால் கோபப்படமாட்டிங்களே?” கோதை ஆரம்பித்தாள்.

“நீ கோபப்படும்படி பேசமாட்டாய். நீ கெட்டிக்கார பெண்”

“அதனால் தான் இது பற்றி பேச்சை எடுக்கவில்லை. நீங்கள் கேட்டதால் நான் சொல்லுகிறேன்”

“பெரியார் எப்படி பெரிய ஆளானார்? ஏன்?”

“அவர் தீவிரமாக கடவுள் எதிர்ப்பைக் கொண்டார்.”

“உங்களுக்கு தெரியுமா? கடவுள் எதிர்ப்பு என்பது ராமர் காலத்திலேயே இருந்து வந்திருக்கிறது ராமர் வாழ்ந்த காலத்திலேயே ஜாபாலி என்ற முனிவர் இதைப் பற்றி பேசுகிறார் கிருஷ்ணர் வாழ்ந்த காலத்திலே அவரை எதிர்த்து சிசுபாலன் வாழ்ந்திருக்கிறான். சங்கரர் வாழ்ந்த காலத்தில் இருந்திருக்கிறது. கடவுள் மறுப்புக்கு இந்து மதத்தில் நாத்திக மதம் என்று பேரும் இட்டு அதை அங்கீகரித்திருக்கிறார்கள் பல காலங்களில் பலவிதமாக இருந்தார்கள் இவர்கள் எல்லாம் காலத்தால் அடித்துச் செல்லப்பட்டார்கள். “பெரியார் இந்த கடவுள் எதிர்ப்பை ஏற்க கொண்ட பொழுது அவருடைய அதிர்ஷ்டம் அரசாங்க நிர்வாகம் அவரைச் சார்ந்தவரிடம் இருந்தது. அதனால் ஓரளவுக்கு வளர்ந்தார். ஆனாலும் அவராலே பெரிதாக எதுவும் சாதித்து விட முடியவில்லை நீங்கள் மனதை தொட்டுச் சொல்லுங்கள். பெரியார் இருந்த பொழுது கடவுள் மறுப்பு இயக்கத்தில் எவ்வளவு பேர் இருந்தார்கள்? இப்போது எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? அவரால் அவருடைய கொள்கையால் ஈர்க்கப்பட்டு கடவுள் மறுப்பு இயக்கத்தில் சேர்ந்தவர்கள் எவ்வளவு பேர்? பெரியார் காலத்தில் எவ்வளவு கோவில்கள் இருந்தன? பெரியார் மறைவுக்குப் எவ்வளவு கோயில்கள் கட்டப்பட்டன? ஏதாவது ஒரு புள்ளி விவரம் இருக்கிறதா? இருந்தால் அவை பெரியாரின் கொள்கை நீர்த்துப் போனதை நன்றாக சொல்லும். கடவுள் மறுப்பு இயக்கம் பல பகுதிகளில் பல காலங்களில் வந்திருக்கின்றன. அவைகள் எல்லாம் காலத்தால் அடித்துச் செல்லப்பட்டன. ஏனென்றால் அவைகளுக்கு உண்மை என்று அஸ்திவாரம் இல்லை.

“உண்மையிலேயே கடவுளைப் பற்றி ஆராய விரும்பி இருந்தால் அதில் அவர் தீவிரமாக முயற்சி செய்திருந்தால் பெரியார் இன்னும் அதிக உயரத்திற்கு உயர்ந்திருப்பார்

அப்துல் கலாம் அவர்களிடம் ஒரு மாணவன் ஒரு கேள்வி கேட்கிறான். அந்தக் கேள்வி என்ன தெரியுமா? கடவுள் எங்கே? கடவுள் இருக்கிறாரா? இல்லையா? என்ற கேள்வி தான்.

அப்துல் கலாம் கேள்வி கேட்ட மாணவரிடம் ஒரு பதில் கேள்வி கேட்கிறார்.

“பூமிக்குத் தன்னைத்தானே சுற்றிக்கொள்ள எவ்வளவு நேரம் ஆகும்?”

மாணவர் 24 மணி நேரம் என்று பதில் கூறுகிறார்.

“சூரியன் நாம் இருக்கும் பால்வீதியை சுற்றிவர எவ்வளவு காலமாகும்? “ மறுபடியும் கேட்கிறார்.

வகுப்பில் உள்ள மாணவர் யாருக்கும் பதில் தெரியவில்லை.

அப்துல் கலாம் தொடர்கிறார்.

“சூரியன் பால்வீதியை சுற்றிவர 21. 5 கோடி ஆண்டுகள் ஆகும் ஒரு பால்வீதியை நம் கண்ணுக்குத் தெரியும் சூரியன் சுற்றி வரவே இவ்வளவு காலம் ஆகிறது. அண்டத்தில் இந்த பால் வீதி போல் பல பால் வீதிகள் இருக்கின்றன. இவையெல்லாம் அண்டத்தில் ஒரு குறிப்பிட்ட தூரத்தில் காலத்தில் மிகச்சரியாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. துல்லியமான இயக்கத்தை எது யார் இந்த அற்புதமான இயக்கத்தை வடிவமைத்தது யார் சொல்லுங்கள்?” என்று கேட்டார்.

எந்த மாணவனும் பதில் சொல்ல முன் வரவில்லை. அவரே தொடர்ந்து கண்ணுக்கு முன் தெரியும் ஒரு சக்தி சூரியன். கண்ணுக்குத் தெரியாமல் இயக்கிக் கொண்டிருக்கும் சக்தி கடவுள் என்றார்.

அதைத்தான் நாங்கள் இயற்கை என்று சொல்கிறோம் என்று ஒரு மாணவன் ஆரம்பித்தான்

“இயற்கை என்றால் அதைப் பார்த்திருக்கிறாயா? அது எங்கே இருக்கிறது? உனக்கு தெரியாதல்லவா. அதற்கு வேறு பெயர் சூட்டலாம். ஆனாலும் அதுவும் கடவுள்தான். பல விஷயங்களை வடிவமைத்து ஒரே சீராக பல வருடங்களாக நடத்திக் கொண்டு வருகிறார். அதை இவ்வளவு நேர்த்தியாக செய்வது ஒன்றுமே அறியாத ஜடப்பொருளான இயற்கையாக இருக்க முடியாது.

“ரொம்ப வித்தியாசமா யோகிச்சிருக்கே. உண்மையிலே நீ வருவதற்கு முன்னாள் இது மாதிரி யாராவது பேசியிருந்தால் முதலில் கேக்கவே மாட்டேன். கோபம் வரும். ஆனால் நீ பேசினால் சிந்தித்துத் தான் பேசுவாய் என்று நானும் உணர ஆரம்பித்து விட்டேன். மேலே பேசு.” ராசநாயகம் அவளை ஊக்குவித்தார்.

தன கணவர் மருமகளின் அறிவுத்திறனை பாராட்டி அவள் சொல்வதை கவனமாக கேப்பதை தனக்கு கிடைத்த கவுரவமாக சந்திரா நினைத்தார்.

வழக்கமாக ஒரு பொது நிகழ்ச்சியில் பெரியார் கேட்பார் “யார் உலகில் சிறந்த பத்தினிகள் யார்?”

உடனே நமது மக்கள் “திரௌபதி நளாயினி மண்டோதரி காந்தாரி என்று யார் யார் பேரையோ சொல்வார்கள்

உடனே “டே மடையா உன் அம்மா பத்தினி இல்லையா? உன் பொண்டாட்டி பத்தினி இல்லையா? என்று கேட்பார். திருதிருவென்று நம்மாள்முழிப்பார்.

பெரியார் சிரித்துக்கொண்டே “அதுதாண்டா நம்மகிட்ட உள்ள தாழ்வு மனப்பான்மை. பத்தினி யாருன்னு கேட்டா என் பொண்டாட்டின்னு சொல்லணும் அம்மான்னு சொல்லனும். யாரோ கட்டுக்கதை விட்டானா அதைக் கேட்டுவிட்டு நம்புவதா? நான் சொல்வதை மட்டும் கேட்க வேண்டும்.

“உலகில் சிறந்த உலகில் சிறந்த கற்புக்கரசிகள் கதை உங்களுக்கு தெரியுமா?”

“அதெல்லாம் எனக்கு தெரியாது”

முதலில் காந்தாரி என்ற பெண்மணி. கண் தெரியாத ஒருவரை திருமணம் செய்து கணவராக நான் ஏற்றுக் கொண்ட பின் கணவர் காணாத காட்சியை நானும் காண மாட்டேன் என்ற திட சித்ததுடன் கண்களில் கருப்புத் துணியை கட்டிக்கொண்டு வாழ் நாள் காலம் முழுவதும் வாழ்ந்தார்.

நளாயினி என்ற பெண்மணி தனது வியாதிக்கார நடக்க முடியாத கணவனை சுமந்து கொண்டு அந்தக் கணவன் ஒரு வேசியிடம் செல்ல ஆசைப்படுகிறார் என்று அறிந்து அந்த வேசியிடம் தன் கணவனுடன் ஒரு பொழுது கழிக்கும்படி மன்றாடி அவரை ஒத்துக்கொள்ளவைக்கிறார்.

துரோபதி என்ற பெண் ஐந்து கணவர்களை மணம் செய்து கொண்டு ஒவ்வொரு கணவருடன் குறிப்பிட்ட நாட்கள் வாழ்ந்து கொண்டு எந்தக் கணவருடன் வாழ்கிறாரோ அந்தக் கணவரை மட்டும் மனதால் மனத்தில் நிறுத்தி வைத்து மற்றவரை மனதாலும் நினைக்காத பெண்ணாக இருந்தார்.

உலகம் முழுவதும் இது மாதிரி ஒரு சூழ்நிலையைச் சொல்லி நீங்கள் தேடினாலும் இந்த மாதிரி செயலாற்றக்கூடிய ஒரு பெண்ணைக் காட்ட முடியுமா? ஆனால் நிறைய பெண்கள் ஐந்து பேரைக் கல்யாணம் செய்து கொள்ள முன்வருவார்கள். ஏனென்றால் அவர்கள் மனதில் ஓடுவதை யாரும் அறியமுடியாது என்பதால். அதனால்தான் உலகத்தில் சிறந்த பத்தினிகள் அவர்கள்தான்.

இப்போது உள்ள பெண்களிடம் இந்தக் கேள்வியை வையுங்கள்.

அவர்கள் பதில் ஒரே மாதிரியாக இருக்கும் உங்களுக்கு அதிர்ச்சியாக இருக்காது.

கட்டியவருக்கு கண் தெரியவில்லை என்றால் அது அவருடைய பிரச்சினை. அவருக்குக் கண் தெரியவில்லை என்பதற்காக கண்ணை கட்டிக்கொள்வது என்பது வடிகட்டினப் பைத்தியக்காரத்தனம். அடுத்ததாக உடம்பில் வியாதி. நடக்க முடியவில்லை. இதில் பெண்ணுக்கு ஆசைப்படுகிறாரா? அப்படியே உயிரோடு வைத்து கொளுத்தி விடுவேன்.

அவர்களை குறை சொல்லி பயனில்லை. கற்பின் அளவுகோல் நாளுக்கு நாள் குறைந்துகொண்டிருக்கிறது. முன் காலத்தில் கணவனை தவிர வேறு யாரையும் நினைக்காமல் வாழ்ந்தார்கள். இப்போது எந்த பெண்ணிடமும் திருமணம் ஆனவர்களோ, இல்லையோ நீங்கள் கேளுங்கள். உங்களுக்கு பிடித்த 5 ஆண்கள் சொல்லுங்கள் என்று. அவர்கள் வரிசையில் அவர்கள் கணவன் 5வதாக வந்தால் அவர்கள் கணவன்மார்கள் அதிர்ஷ்டசாலிகள். இந்த நடிகர், இந்த விளையாட்டு வீரர் இந்த தலைவர். இந்தமாதிரி கணவன்மார்களுக்கும் பொருந்தும். முன்பெல்லாம் கணவன் மனைவிக்குள் ஒரு ஒற்றுமை புரிதல் இருக்கும். இப்போது கணவன் மனைவியை சந்தகிக்கிறான் மனைவி கணவனை சந்தேகிக்கிறாள். இருவருமே நடிக்ககிறார்கள். உலகம் ஒரு நாடகமேடை என்பார்கள். அது தற்போது சரியாக இருக்கிறது."

"அம்மா இன்னிக்கி இவ்வளவு போதும். சேகர் வாழ்க்கையை பற்றிய கவலை இனிமேல் எங்களுக்கு இல்லை"

அவர் சொல்லும்போது சந்திரா முகத்தில் 1000 வாட்ஸ் பிரகாசம் தெரிந்தது.

அன்று இரவு சேகர் “இன்று என்ன நடந்தது?” என்று கேட்டான்.

“ஏன்? இன்று என்ன விஷேஷம்?” கோதை கேட்டாள்.

“அப்பா உன்னைப்பற்றி தலைவரிடம் பேசப்போவதாக சொன்னார்.”

“அப்படியா?” அன்று நடந்த உரையாடலை விலாவரியாக சொன்னாள்.

** ** **

ராசநாயகம் தலைவரிடம் “ஐயா நமது பெண்கள் அணிக்கு ஒரு சரியான தலைவி கிடைத்து விட்டார். ஆனால் என்ன? பெருமாளை விட்டு கொடுக்க மாட்டார். அவளுக்கு தர்க்கரீதியாக பதில் சொன்னால் அவள் ஏற்றுக் கொள்வதற்கு வாய்ப்பு உண்டு. நீங்க சொல்கிறீர்கள் என்றோ இல்லை நான் சொல்கிறேன் என்றோ இல்லை பெரியாரே சொல்லிவிட்டார் என்றோ சொல்லி அவளை அவள் வழியில் இருந்து திருப்ப முடியாது. அவள் அவள் வழியிலேயே பயணிக்கட்டும். நாம் தான் முடிவு செய்ய வேண்டும். நமக்கு பெண்கள் முன்னேற்றம் முக்கியமா? இல்லை கடவுள் இல்லை என்ற கொள்கையைப் பரப்புவது முக்கியமா? என்று. நமக்கு முன்னுரிமை பெண்கள் முன்னேற்றம் என்றால் அந்தப் பொறுப்பை அவளிடம் விட்டுவிடலாம். அவள் சிறப்பாக செய்வார் என்று நம்பிக்கை எனக்கு உண்டு. இது எல்லாம் பேசிவிட்டு அவள் மாநாட்டிற்கு வந்தது, குறிப்பு எடுத்தது, அங்கு சுத்தம் இல்லாத இருப்பதை குற்றம் சுட்டிக்காட்டியது, சுத்தம் செய்ய முன்வந்தது, பெரியார் படத்தை அவளுக்காக தான் ஹாலில் இருந்து ரூமுக்கு மாற்றியது, அவள் அது குறித்து அவள் அவரை பாராட்டியது, தன் மனைவியை ஊக்கப்படுத்தி யோகாவில் ஈடுபடவைத்தது, பையன்

அலுவலகத்தில் இறை வணக்கம் பாடியது, பெரியாரை பற்றிய அவள் கருத்து அவர் கூறக்கூற தலைவர், மற்றும் கட்சிக்காரர்கள் வாய் மூடாமல் வியந்து பேச்சற்று நின்றார்கள். என்ன நம்ப ஊரில் இப்ப்டி ஒரு பெண்ணா? அவள் குறித்து ராசநாயகம் பல விஷயங்களை கூறியதைப் பார்த்து தலைவர் வியந்தார். நமக்கு பெண்கள் முன்னேற்றம் தான் முக்கியம். காலம் காலமாக கடவுள் இல்லை என்று சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஆனால் கோவில்கள் பெருகி கொண்டு தான் வருகின்றன பெண்கள் முன்னேற்றம் அதை முற்றிலும் மறந்து விட்டோம். ஒரு வாய்ப்பு கொடுத்து பார்க்கலாம் அவரால் பெண்கள் முன்னேற்ற முடியும் என்றால் நமக்கு மகிழ்ச்சி தான்.

சேகர் “அப்பா உன்னிடம் ஏதோ பேச வேண்டும் என்று ஆசைப்படுகிறார் எப்போது பேசலாம் என்று கேட்கிறார்?” என்றான்.

“இது என்ன அவர் என் மாமனார். அவர் கூப்பிட்டால் வந்து நிற்க வேண்டிய பெண் நான். அவர் என் கூட எப்ப கொண்டுவேனாலும் பேசலாம்.”

“அப்படி இல்லை நிறைய நேரம் பேசணும் என்று ஆசைப்படுகிறார்.”

“சரி அம்மாவிடம் சொல்லுங்கள் நீங்களும் இருங்கள். இன்று கூட பேசலாம். இரவு 8 மணிக்கு இரவு உணவிற்கு பிறகு “

எல்லாரும் கூடினார்கள்.

“அம்மா நீ எங்கள் வீட்டுக்கு வந்தது மிகவும் பெருமையாக இருக்கிறது. உன்னைப் பற்றி என் தலைவரிடம் ஓரளவு கூற முடிந்தது. அவர் இந்த ஊரில் இவ்வளவு பெரிய திறமை வாய்ந்த பெண் இருக்கிறாரே என்று வியப்பு அடைகிறார். உனக்கு

சுதந்திரம் கொடுத்து உன்னை எல்லா விதத்திலும் ஊக்குவிக்க சொல்கிறார். பெண்கள் முன்னேற்றத்திற்காக நீ ஏதாவது செய்தால் அதற்குத் துணையாகவும் ஒத்துழைப்பு தருவதாகவும் சொல்கிறார். உன்னால் பெண்கள் முன்னேற்ற ஏதாவது செய்ய முடிந்தால் உனக்கு குடும்பத்தின் ஒத்துழைப்பும் முழுதாக கிடைக்கும். ஏதாவது திட்டம் வைத்திருக்கிருந்தால் நீ தயங்க வேண்டாம். இப்போது எல்லோர் முன்னிலையிலும் தாராளமாக சொல்லலாம்."

சேகர் "அப்பா அவளே திருமணம் முடிந்த பின்பு வசதியும் வாய்ப்பும் இருந்தால் சமூக சேவை செய்வேன் என்று என்னிடம் முன்பே சொல்லி இருந்தாள். இப்போ அவளுக்கு வாய்ப்பும் இருக்கு வசதியும் இருக்கு. தலைவரே உதவி பண்ணுகிறேன் என்று சொல்லிவிட்டார்" என்று சொல்லி கோதையிடம்" உன் எண்ணப்படியே நீ விரும்பும் சமூக சேவையைச் செய்யலாம்" என்றான்.

"மாமா. என்னுடைய நீண்ட நாள் கனவு பெண்களை நன்கு படிக்க வைக்க வேண்டும் என்பதுதான். பெண்கள் படிப்பதற்கு அதுவும் வயதான பெண்கள் படிப்பதற்கு தடைகள் மிகவும் இருக்கின்றன. அந்தத் தடைகளைத் தாண்டி அந்தக் குடும்ப பொறுப்புகளை தாண்டி அவர்களைப் படித்து வைப்பது என்பது மிகவும் கடினமான விஷயம். நீங்கள் எனக்கு உதவி செய்தால் நான் இரவு நேர பள்ளி தொடங்கி இங்கு உள்ள பெண்களை நன்கு படிக்க வைத்து ஒரு டிகிரி வாங்கி கொடுப்பேன். என்னுடைய ஆசை நான் பெருமாளிடம் அடிக்கடி கேட்பது இதுதான். பெண்கள் நன்கு படிக்க வேண்டும். உலகம் தெரிந்தவர்களாக இருக்க வேண்டும். பெண்கள் சிந்தனையாளர்களாக இருந்தால் தான் நல்ல மக்கள் உலகத்திற்கு கிடைப்பார்கள். உங்களுக்கே தெரியும். நீங்களும் விவசாயி. விளைநிலம் சரியாக இருந்தால்தான் விளைச்சல் சிறப்பாக இருக்கும்."

ஒரு நல்ல நாளில் அரசாங்கப் பள்ளியில் பெண்கள் இரவு பள்ளி தொடங்கப்பட்டது. சேகர் விருப்பப்படி கோதையின்

பெற்றோர்கள் வரவழைக்கப்பட்டார்கள். கோதையின் பெற்றோரிடம் ராசநாயகம் கோதையை வானளாவ புகழ்ந்தார். உங்கள் பெண் உங்கள் வளர்ப்பு எல்லாமே மிகவும் அதிசயப்படக் கூடியவை. இந்த கிராம சூழ்நிலையில் இவ்வளவு திறமை உள்ள பெண்ணை உருவாக்கியதற்கு உங்களுக்கு எனது பாராட்டுக்கள். கண்ணபிரான் கூறுகையில் நான் ஒன்றும் செய்யவில்லை, எல்லாம் பெருமாள் செயல் என்று சுருக்கமாக முடித்துக் கொண்டார். விழாவுக்கு தலைவர் வந்திருந்தார். தலைவரும் இரண்டு ஒரு வார்த்தைகள் கோதை பற்றி பாராட்டி விட்டு கோதையின் மாமனார் சொல்வதெல்லாம் சரியாக இருந்தால் இந்தப் பெண் இந்த ஊருக்கு ஏன் இந்த மாவட்டத்திற்கு ஒரு மாதிரி பெண்ணாக இருப்பார். நாங்கள் எல்லாம் அவருக்கு உறுதுணையாக இருந்து முழு ஒத்துழைப்பு கொடுப்போம்.

முதலில் இரண்டு மூன்று பெண்கள் தான் வந்தார்கள். ராசநாயகம்கூட ‘என்னம்மா இரண்டு மூன்று பெண்களுக்காகவா நீ இவ்வளவு மெனக்கிடுகிறாய்". என்கிறார்.

"வருவது எவ்வளவு பேர் என்பது முக்கியமே கிடையாது. ஒருவர் வந்தால்கூட நான் ஆனால் அவருக்காக உழைக்கத் தயாராக இருக்கிறேன்" என்றாள்.

யாராருக்கெல்லாம் எழுதினார். ஒரு சிறிய லைப்ரரி தொடங்கப்பட்டது. புத்தகங்கள் வந்தன அருகில் உள்ள டவுனில் இருந்து பேங்கில் வேலை செய்யும் ஊழியர்கள் எல் ஐ சி யில் வேலை செய்யும் ஊழியர்களுடன் தொடர்பு கொண்டு அவர்களை ஒருவர் மாற்றி ஒருவராக வாரம் ஒருவரை வர செய்தார். சில பெற்றோர்கள் குழந்தைகளை சிறு குழந்தைகளாக இருப்பதால் அவர்களை விட்டு வருவதற்கு கஷ்டமாக இருக்கின்றதாக சொன்னபோது அருகிலேயே ஒரு வகுப்பறையில் குழந்தைகளுக்காக விளையாட்டு சாமான்கள் ஏற்பாடு செய்தார். மாமியாரிடம் அம்மா நான் தனியாக போவதில் கஷ்டமாக

இருக்கிறது நான் கிளம்பும்போது வேலை முடிந்து விடுகிறது. உங்களுக்கும் பேரப்பிள்ளைகளுடன் விளையாட ஆசையாய் இருக்கிறது. நீங்களும் ஓய்வாக தான் இருக்கிறீர்கள். வாருங்கள் உங்களுக்கு நடைபயிற்சிக்கு நடை பயிற்சி ஆகிறது. குழந்தைகளை பேரப்பிள்ளைகளாக நினைத்து நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள். சிறு குழந்தைகள் விளையாடும்போது நமது வயது தானாக குறையும் என்று ஏதோ சொல்லி மாமியாரையும் குழந்தைகளை பார்த்துக் கொள்ள ஏற்பாடு செய்து விட்டார். ஓரளவு வளர்ந்த குழந்தைகள் வீட்டில் தாயார் இல்லாததனால் சரியாக படிப்பது இல்லை என்று ஒரு சவால் வந்தது. எல்லா குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு வரச் சொல்லி விட்டார். வகுப்பறைகளில் அவர்களுக்கு வாரம் ஒரு முறை ஒரு பெரிய கிளாஸ் மாணவன் அல்லது மாணவி அவருக்கு கீழே உள்ள வகுப்புகளுக்கு பாடம் எடுக்க வேண்டும் என்று கொண்டு வந்தார். இது நன்றாக வேலை செய்தது. மாணவர்களுக்கும் தாங்கள் கற்பிக்கும் ஆசிரியர்களாக நிற்பது ஒரு சவாலாக இருந்தது. அதற்காக கூடுதலாகவே படித்தார்கள். இது மாதிரி குழந்தைகள் படிப்பு, சிறு குழந்தைகள் பராமரிப்பு, பெற்றோர்கள் கல்வி எல்லாம் சேர்ந்து அரசு பள்ளியை அந்த கிராம மக்கள் முழுவதுமாக பயன்படுத்த தொடங்கி விட்டார்கள். மாதத்தில் முதல் ஞாயிற்றுக்கிழமை அன்று எல்லோருக்கும் போட்டி வைத்தார். பெண்களுக்கு தனி போட்டி, மாணவர்களுக்கு தனி போட்டி குழந்தைகளுக்கு தனி போட்டி என்று எல்லோரையும் ஈடுபடுத்தினார். இவருடைய வளர்ச்சியையும் ஆர்வத்தையும் கண்டு கிராமமே திகைத்து நின்றது. கிராமத்தில் உள்ளவர்கள் அவ்வளவு பேரும் உங்களுடைய சொல்லுக்கு கட்டுபடுவார்கள். அவர் சொன்னால் சரியாகத்தான் இருக்கும் என்ற பேச்சு முறை வந்துவிட்டது. தலைவர் ஒருமுறை கலெக்டரை அழைத்து கிராமத்தில் இந்தப் பெண் செய்யும் அற்புதங்களை விளக்கினார். கலெக்டர் ஒரு பெண்மணியாக இருந்ததால் மனம் திறந்து

பாராட்டினார். உங்கள் திறமை இந்த கிராமத்திற்குள் மாட்டிக் கொள்ளக் கூடாது. இதைத் தாண்டி செல்ல வேண்டும். உங்களை சுற்றி உள்ள ஊர்களுக்கு ஞாயிற்றுக்கிழமை செல்லுங்கள். நான் அங்கு உள்ள மகளிர் குழுக்களை தொடர்பு கொண்டு உங்களுக்கு ஆதரவு தர சொல்கிறேன் ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு கோதை உருவாக வேண்டும். இன்னும் இரண்டு வருடங்களில் எனக்கு 50 கோதைகள் வேண்டும். நீங்கள் தருவீர்களா? இதற்கு ஏதாவது பண உதவி தேவைப்பட்டால் என்னை தொடர்பு கொள்ளுங்கள். நான் ஆவன செய்வேன் என்று மகிழ்ச்சியுடன் சொல்லிவிட்டு கோதையின் கணவர், மாமனார், மாமியார் எல்லோரையும் தனித்தனியாகப் பாராட்டி விட்டு அன்று இரவு அவர்களுடன் உணவருந்தி விட்டு நான் திரும்ப வரும் பொழுது இன்னும் சிறப்பாக எதிர்பார்க்கிறேன் என்று சொல்லிவிட்டு சென்றார்.

கலெக்டர் சொன்னபடியே ஞாயிற்றுக்கிழமை கோதை அருகில் உள்ள ஊர்களுக்கு செல்ல ஆரம்பித்தார். கோதையின் கணவர் அந்த ஊரில் பள்ளியில் நடக்கும் இரவு நேர கல்வி, மாணவர்களுக்கு இரவு நேர டியூஷன் குழந்தைகளுக்கு இரவு நேர விளையாட்டு எல்லா நிகழ்ச்சிகளையும் வீடியோ எடுத்து கோதை செல்லும் ஊர்களில் போட்டு காண்பித்தார். கோதை பெண்களிடம் 'நீங்களும் உங்கள் கிராமத்தில் செய்யலாம். ஆசையும், திடமான நம்பிக்கையும், செய்ய முடியும் என்ற எண்ணமும் இருந்தால் போதும். இறைவன் உங்களுக்கு தேவையானவைகளை தேவையானவர்கள் மூலம் அனுப்புவான். நீங்கள் எல்லாரும் அவருடைய பிரதிநிதிகள் ஆவீர்கள். உங்கள் உடல் ஆரோக்கியம் மற்ற கவலைகள் எல்லாம் இறைவன் பார்த்துக் கொள்வான். அன்பரைப் பார்த்துக் கொள்வது தான் அவருடைய வேலை. நீங்கள் எல்லோரும் ஒன்றாக சேர்ந்து வேலை செய்யுங்கள். எல்லோரும் சேர்ந்து பயணிப்போம். நலம் பெறுவோம் என்று

போகும் இடங்கள் எல்லாம் இதை பிரச்சாரம் செய்து கொண்டு சென்றார். ஆச்சரியமாக ஒவ்வொரு ஊரிலும் ஊருக்கு ஒரு கோதை உருவானார். அந்த அமைப்புக்களுக்கெல்லாம் கோதை மகளிர் குழு என்று பெயர் வைத்து அவளை கௌரவித்தார்கள். அந்தக் கோழிகள் எல்லாம் ஒன்று சேர்த்து கலெக்டர் தலைமையில் ஒரு விழா கொண்டாடினார். கலெக்டர் மிகவும் சிறந்த சாதனை செய்ததாக அவரைப் பாராட்டினார் கிராமத்து பையன்களுக்கு விளையாட்டுத்துறை பற்றி அடுத்ததாக பயிற்சி அளிக்க விரும்பினார் கிராமத்து பையன்கள் உடல் நலம் மிக்கவர்கள். மன உறுதி கொண்டவர்கள். சளைக்காமல் உழைப்பவர்கள். அவர்களுக்கு வேறு ஈர்ப்புகள் அதிகம் இல்லை. அவர்களை விளையாட்டுத்துறையில் ஒருமுகப்படுத்தினால் விளையாட்டுத்துறையில் மேம்படலாம் என்று கோதை கூட்டத்தில் கூறினார். கலெக்டரும் அதற்கு உதவி செய்வதாக சொல்லி மாவட்ட விளையாட்டு துறையை அதிகாரியை வரவழைத்தார் அடுத்த மீட்டிங் போது மாவட்ட விளையாட்டு துறை அதிகாரி வந்து விளையாட்டுத் துறைக்கு வேண்டிய சாதனங்களை அரசு கொடுக்க இருப்பதாக அறிவித்தார். எல்லா பள்ளிகளிலும் விளையாட்டுத்துறைக்கான அடிப்படை கட்டுமான வசதிகள் வந்து சேர்ந்தன. பையன்களுக்கு உலக சாதனை வீரர்கள் சாதனைகள் சாதனையில் எட்ட வேண்டிய உயரங்கள் எல்லாம் தெளிவாக கூறப்பட்டன ஆர்வம் உள்ள மாணவர்கள் ஓட்டம் தாண்டுதல் கபடி போன்ற விளையாட்டுகளில் ஈடுபட்டனர். மொத்தத்தில் அரசு பள்ளிகள் நாள் முழுவதும் ஏதோ நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டிருந்தன.

மாதத்தின் முதல் ஞாயிற்றுக்கிழமை பள்ளியில் எதிர்பாராத கூட்டம். குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை ஒரே விளையாட்டு. பெண்களுக்காக ஸ்கிப்பிங், ரிங் பால், ஓட்டம், நொண்டி ஆண்களுக்காக கபடி, வாலிபால் ஏறப்டு

செய்திருந்தார்கள். கோதை, அவர் கணவர், அவர் மாமனார், மாமியார் எல்லோருக்கும் ஒரே மகிழ்ச்சி. யாரும் இவ்வளவு கூட்டம் எதிர்பார்க்கவில்லை. ஒரு மாதிரி நல்லபடியாகவே நிகழ்ச்சிகள் நிகழ்ந்து முடிந்தன.

சில நாட்கள் கழித்து ஒருவர் கோதையை சந்திக்க வீட்டுக்கு வந்தார். அவர் ஞாயிற்றுக்கிழமை நிகழ்ச்சிக்கு வந்திருந்தாராம்.

“மிகவும் சிறப்பாக இருந்தது. இவ்வளவு பேர் கூடும் இடத்தில் தனக்கு அனுமதி கொடுத்தால் ஒரு தம்போலா போட்டுக் கொள்வேன்”

“தம்போலா என்பது ஒரு சூதாட்ட விளையாட்டல்லவா? என்று கேட்டார்.

“சூதாட்டம் என்று சொல்ல முடியாது. ஒரு மாதிரி விளையாட்டு.”

“அந்த விளையாட்டில் ஏதாவது திறமை வேண்டி இருக்குமா?

“திறமை எல்லாம் இல்லை. அதிர்ஷ்டம் இருந்தால் ஒரு ரூபாய்க்கு பத்து ரூபாய்க்கு கிடைக்கும்”

“அதிர்ஷ்டம் இல்லை என்றால்”

“இல்லையென்றால் என்ன ஒரு ரூபாய் மட்டும் போகும்.”

“இது ஒரு வகை சூதாட்டம் தான். மக்களை மயக்கி ஏமாற்றி அவர்களிடமிருந்து பணம் பறிக்கும் வழிதான். நான் இதற்கு ஒப்புக் கொள்ள மாட்டேன்”

“நீங்கள் என்ன சொல்கிறீர்கள். டிவிலே பாருங்க எப்பவுமே விளம்பரம் தான். பெரிய பெரிய ஆளுங்க எல்லாம் விளம்பரம் தராங்க அவங்க எல்லாம் தப்பாவா பண்றாங்க”

“ஐயா, என்னைத் தப்பா நினைச்சுக்காதீங்க. அடுத்தவங்க பண்றது தப்பா ரைட்டா என்று சொல்வதற்கு நான் பெரிய ஆள் கிடையாது. என்னைக் கேட்டா நான் ஒத்துக்கொள்ளமாட்டேன். என்னை பொறுத்தவரையில் அது ஒரு சூதாட்டம் தான்.”

அந்த ஆள் நேரே எம்எல்ஏவிடம் போய் “என்ன உங்கள் தொகுதியில் அந்த கிராமத்தில் ஞாயிறன்று எல்லாரும் கூடுகிறார்கள். நிறைய கூட்டம் வருகிறது. நான் தம்போலா போட இடம் கேட்டேன். தர முடியாது என்கிறார்கள். வர கூட்டத்திற்கு அந்த இடத்துக்கு தரை வாடகை போட்டா கூட மாசத்துக்கு ஒரு அமௌன்ட் உங்களுக்கு கிடைக்கும்” என்றார்.

“நீ அப்படி சொல்றியா சரி அடுத்த மாசம் நானே வந்து பார்க்கிறேன்” என்று எம்எல்ஏ சொல்லிவிட்டார்.

அடுத்த மாதம் நிகழ்ச்சியில் எதிர்பாராமல் எம்எல்ஏ வந்து நின்றார். எல்லோரும் எம்எல்ஏ, எம்எல்ஏ என்று மரியாதை கொடுத்தார்கள். எம்.எல்.ஏ தன் மனைவியுடன் வந்திருந்ததால் மந்திரிக்கும் அவர் மனைவிக்கும் சிறப்பான நாற்காலிகள் கொண்டுவரப்பட்டன. எம்எல்ஏ ஆட்கள் கோதையிடம் வந்து “அம்மா எம்எல்ஏ வந்திருக்கிறாரு. அவரை கௌரவிக்கணும் வாங்க என்று சொல்லி தயாராக வைத்திருந்த பொன்னாடைகளை கொண்டு வந்தார்கள். அதற்கு முன்பே எம்எல்ஏ ஆட்கள் கோதையிடம் வந்து எம்.எல்.ஏ நீங்கள் நடத்தும் நிகழ்ச்சிகளை வீடியோ மூலம் பார்த்திருக்கிறார். மிகவும் ரசித்தார். அவருடைய பாராட்டுகளைச் சொல்ல சொன்னார். அவர் மேலும் சொல்லும் பொழுது இங்க கூட்டம் வருவதால் நிறைய கடைகள் போடுவதற்கு ஏற்பாடு செய்யப்படும் என்றும் சொல்லியிருக்கிறார். நீங்கள் அவரை கௌரவித்து அவர் சொல்வதை கேளுங்கள். உங்களுக்கும் பலன் கிடைக்கும். அவரும் மகிழ்ச்சியாக உங்களை ஆதரிப்பார். மேலும் பெரிய அளவில் சப்போர்ட் செய்வார். இது

தொலைநோக்கு பார்வையில் உங்களுக்கு நன்மை பயக்கும் என்று சொன்னார்கள்.

எம்எல்ஏவிடம் கூட்டிப் போனார்கள்.

எம்எல்ஏக்கும் அவரது மனைவிக்கும் சால்வை போர்த்தத் சொன்னார்கள். சால்வையை போர்த்தி விட்டு யாரும் எதிர்பார்க்காத வகையில் எம் எல் ஏ அவர் மனைவிபக்கத்தில் இருக்கும்போது கோதை அவர்கள் காலில் விழுந்து வணங்கினார்.

“என்னம்மா. இதில்லாம். நல்லா இரு. எழுந்திரு. சின்ன பெண்ணா இருந்துகிட்டு எவ்வளவு பெரிய வேலை செஞ்சிருக்கே. உனக்கு என்ன வேணும்னாலும் என்னைக் கேளு. உனக்கு என்னோட முழு சப்போர்ட் உண்டு. எழுந்திரம்மா”

MLA மனைவி கையால் அவளை தூக்கி “என்னையும் எப்போ வேணும்னாலும் தொடர்பு கொள்ளலாம். நீ செஞ்சிருக்கிற விஷயம் ரொம்ப பெரிசு” என்கிறார்.

“நான் பெண்கள் முன்னேற்றத்திற்காக என்னால் முடிந்த சின்ன அளவில் செய்து கொண்டிருக்கிறேன். இதில் கடை போட்டு ஆரவாரங்கள் ஆரம்பித்து விட்டால் என்னுடைய திட்டம் தோல்வி அடைந்து விடும். உங்களுக்குள்ள வசதிக்கு நீங்கள் வரும் எல்லோருக்கும் உணவு கொடுக்கலாம். 5000 ரூபாய் ஆகலாம்.” எம்எல்ஏ மனைவியிடம் அம்மா நீங்கள் பார்த்து ஏற்பாடு செய்யலாம். இவர்களெல்லாம் கிராமத்து ஜனங்கள் நல்லவர்கள். சூதுவாது அறியாதவர்கள். இங்கு வியாபாரம், சூதாட்டம் வேண்டாம். ஐயா பக்கத்தில் நின்று கொண்டிருக்கிறாரே. ஏற்கனவே என்னிடம் தம்போலா போடக்கேட்டு நான் முடியாது என்று சொல்லிவிட்டேன். நீங்கள் அய்யாவிடம் சொல்லி அவர் நேரம் கிடைக்கும் போதெல்லாம் வந்து எங்களை ஆதரிக்கச்

சொல்லுங்கள். மிகவும் நன்றி உடையவளாக இருப்பேன்" என்று கெஞ்சும் குரலில் சொன்னாள்..

எம் எல் ஏ வும் அவரது மனைவியும் இந்த மாதிரி கோதை செய்வாள் என்று எதிர்பார்க்கவில்லை.

'உங்களுக்கு வேண்டாம் என்றால் சரிதான்' என்று எம்எல்ஏ மனைவி சொல்லிவிட்டார். அப்படியே நீங்கள் சொன்னபடி ரூ. 5,000 நான் அனுப்ப ஏற்பாடு செய்கிறேன். வருபவர்களுக்கு உணவு கொடுத்து விடுங்கள் கோதையும் அவர்களுக்கு நன்றி தெரிவித்துவிட்டு நிகழ்ச்சிகளை தொடங்கி வைக்கும்படி கேட்டுக் கொண்டார். நிகழ்ச்சிகள் விறுவிறுப்பாக சென்று கொண்டிருந்தன. மக்களின் ஆர்வமும் கிராமத்து சூழலும் எம் எல் ஏ வுக்கும் அவர் மனைவிக்கும் ஒரு சொல்லமுடியாத மகிழ்ச்சியையும், மன அமைதியையும் கொடுத்தன.

எம் எல் ஏ மனைவி தன்னை மறந்து "நானும் பங்கு கொள்ளலாமா" என்று ஆர்வத்துடன் கேட்டார்.

சந்தோஷமாக கைகளை கோர்த்து நடத்தி சென்றார்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு எம்எல்ஏ மனைவி ஸ்கிப்பிங் செய்தது எம்எல்ஏ மனைவிக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது.

எம்எல்ஏவும் என் மனைவி கலந்துகொள்ளும் போது நான் ஏன் கலந்து கொள்ள கூடாது நானும் கலந்து கொள்கிறேன் என்று ஓட்டப்பந்தயத்திலும் கபடியிலும் கலந்து கொண்டார்.

எம் எல் ஏ வுக்கும் அவர் மனைவிக்கும் உண்மையான இன்பம் என்றால் என்ன என்று தெரிந்தது. நேரம் கிடைக்கும்போதெல்லாம் வருவதாக சொன்னார்கள்.

மிகவும் களைகட்டியது.

வீட்டுக்கு வந்தவுடன் மாமனார் "என்னம்மா. எல்லார் முன்னாடியும் எம் எல் ஏ காலில் விழுந்து விட்டாய். இப்படி எல்லாம்

செய்யலாமா?. நீ தன்மானம் தன்மானம் என்று சொல்வாயே. எங்க போச்சு? எனக்கு சுத்தமாகப் பிடிக்கவில்லை.” என்றார்.

அதற்கு கோதை “அப்பா அப்படி சொல்லாதீர்கள். நான் எனக்கு என்று கேட்கும்பொழுது என் சுய கௌரவத்தை விட்டுக் கொடுக்க மாட்டேன். தலை நிமிர்ந்து கேட்பேன். ஆனால் நான் கேட்டது எனக்காக அல்ல. எனது சமூகத்திற்காக கேட்கும் பொழுது நான் யார் காலில் விழுத் தயாராக இருக்கிறேன். எனக்கு என்று கௌரவம் கிடையாது என் கௌரவம் தன்மானம் எல்லாம் மக்கள் சேவைக்கு பின்னால்தான். நான் அப்படி செய்திருக்காவிட்டால் எம் எல் ஏ கடை போட, தரை வாடகை வசூலிக்க, பஞ்சாயத்து பண்ண என்று ஆட்களை போட்டு அரசியலாக்கி திட்டத்தை நீர்த்துப்போக வைத்திருப்பர். அப்படி செய்தால் நல்லது நான் நினைத்தது நடக்கும் என்று தோன்றியது. செய்துவிட்டேன் “

“அம்மா அசத்தி விட்டாய்”

“ஒருவர் பேர் மறந்துவிட்டேன் ஒரு பெரிய நூலகம் நிறுவ ஆசைப்பட்டார். அதற்காக பணம் வசூலித்தார். பணம் பல பேரிடம் கேட்டார். ஒரு பிரபு அவர் மேல் செருப்பை தூக்கிப் போட்டார். அவர் மிக்க நன்றி என்று சொல்லி இந்த பிரபு என்மேல் ஒரு செருப்பைப் போட்டார். அதை ஏலம் விடப் போகிறேன். கேட்பவர்கள் கேட்டு வாங்கிக் கொள்ளலாம் என்று கேட்டு ஒரு நல்ல தொகைக்கு அது செருப்பை விற்று மறுபடியும் அந்த பிரபு விடம் சென்று “ஐயா உங்களால் எனக்கு இவ்வளவு பணம் கிடைத்தது மிக்க நன்றி என்று சொன்னாராம்.

பாலாயி போனில் தொடர்பு கொண்டபோது “ஏதாவது விசேஷமா?” என்று கேட்டார்

“இல்லையம்மா”.

“ஏன் உனக்கு கவலையாக இல்லையா?”

“நான் ஏன் கவலைப்பட வேண்டும். எல்லாவற்றையும் என் பெருமாள் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு எல்லாம் தெரியும். இன்று. நடப்பதும் தெரியும். நாளை. நடக்கபோவதும் தெரியும். இது பற்றி எல்லாம் கொஞ்சம் கூட கவலை இல்லை.”

கோதையின் தெளிவான பதில் அம்மாவிற்கு தெம்பூட்டுவதாக இருந்தது.

சேகரின் அம்மா மட்டும் “என்ன கோதை விசேஷங்கள் வரவில்லையே அருகில் உள்ளவர்கள் எல்லாம் கேட்கிறார்கள். என் உறவினர்கள் கேட்கிறார்கள். நான் என்ன பதில் சொல்வது? ஏதாவது மருத்துவரை பார்த்து வாருங்களேன் என்று சொன்னார்”

“நீங்களே உங்கள் மகனிடம் சொல்லுங்கள் இது பற்றி நான் சொல்வதை விட நீங்கள் கூறுவது பொருத்தமாக இருக்கும்”

“சேகர், நமக்கு வாரிசு என்று வர வேண்டாமா? உறவினர்கள் கேட்கிறார்கள். 7வருடங்களும் போய்விட்டனவே. அவளும் எதோ சமூக சேவை அது இது என்று எதோ சொல்லி அது பற்றிய சிந்தனையே இல்லாமல் இருக்கிறாள். அவள் அம்மாக்காரி அது பற்றி எந்தவித சிந்தனையும் இல்லாமல் அவருக்கு இதில் தொடர்பே இல்லாதது. போல் இருக்கிறார். உன் அப்பாவுக்கு கட்சி கட்சி என்று சொல்லி அதிலியே மூழ்கி கிடக்கிறார். நான் மட்டும் கவலைப்பட்டு புழுங்கிக்கொண்டிருக்கிறேன். கோதையை வேண்டுமானால் ஏதாவது மருத்துவரிடம் அழைத்துச் செல்.”மெதுவாக ஆரம்பித்தார்.

“அம்மா. கோதையின் அம்மா கோதையுடன் அடிக்கடி போனில் தொடர்பு கொண்டுதான் இருக்கிறார். அவர்கள் இங்கு வந்து அப்பாவிடம் எதாவது பேசி நல்ல உறவை கெடுத்துக் கொள்ளவேண்டாம் என்று தான் இங்கு வருவதை தவிர்த்து இருக்கிறாங்க. அவங்க போனில் வீடியோ கால் எல்லாம் பேசிக்கிட்டுதான் இருக்காங்க. மருத்துவரிடம் கேட்டேன். உங்கள்

இருவருக்கும் குறை ஒன்றும் இல்லை. குழந்தை பிறப்பது கொஞ்சம் தாமதமாக இருக்கிறது. இப்போதெல்லாம் குழந்தை உற்பத்தியாக கூடிய அணுக்கள் சுற்றுப்புற சூழல் கேட்டால் குறைந்துவிட்டதாம். அதனால் கொஞ்சம் தாமதம் ஆகலாம். மற்றபடி குறைகள் இல்லை என்று சொல்லிவிட்டார்."

"சரி பார்க்கலாம் என்றால் 7 வருடங்களாகி விட்டது. இப்படியே போனால் என்னாவது என்ற மனதிற்குள் ஒரு அச்சம்"

அப்போதுதான் தெரிந்த சினேகிதி சந்தையில் பார்க்கும் பொழுது சந்திராவிடம் பக்கத்து ஊரில் உள்ள சாமியார் பற்றி சொன்னார்.

"அந்த சாமியார் பார்க்க வருகிறவர்களுக்கு எல்லாம் பிரச்சனை என்ன என்று கண்டுபிடித்து அதுக்கு பரிகாரங்கள் கூறுகிறாராம். அந்த பரிகாரங்களைச் செய்தால் அவர்கள் பிரச்சனை தீர்ந்து விடுகிறதாம். என் உறவினர் சென்னையிலிருந்து பார்ப்பதற்காக நேற்று வந்துவிட்டு சென்றார். உன் மருமகளுக்கும் குழந்தை பிறக்கவில்லையே. நீ ஏன் அந்த சாமியாரிடம் போய் கேட்க கூடாது?".

அதற்கு "என்னம்மா இப்படி கேக்கறீங்க? உங்களுக்குத் தெரியாதா. என் கணவரை பத்தி. நாங்கள் 'கடவுள் இல்லை' கட்சி. எங்களுக்கு. அவருக்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லை. எங்களுக்கும் இருக்கக்கூடாது என்று எதிர்பார்க்கிறவர்.. அவரிடம் சொன்னால் என்னை வெட்டியே போட்டு விடுவார். என்ன நடக்குமோ நடக்கட்டும். நான் ஒன்று செய்வதற்கு இல்லை என்று முடிவுக்கு வந்து எத்தனையோ வருஷங்கள் ஆகிவிட்டன" என்றார் சந்திரா.

"உன்னை விடு. சொல்லு இது உன் மகன் வாழ்க்கை இல்லையா?"

“என் மகன் மட்டும் என்ன? அவங்க அப்பா கட்சி தான். அவனுக்கு இதில் நம்பிக்கை வராது. நம்பிக்கை இல்லாத எந்த காரியங்களும் நல்ல விளைவுகளை தராது. இது இயற்கையின் நியதி.. அதை மீறி நாம் என்ன செய்ய முடியும்?”

சந்திரா தன் சினேகிதியிடம் அவ்வாறு சொல்லிவிட்டாரே தவிர அவருடைய உள் மனது இது பற்றி மேலும் சிந்திக்கத் தொடங்கியது.. நான் என் கணவரைக் கேட்க முடியாது. பையனையும் கேட்க முடியாது.

கோதையை விட்டு சேகரிடம் கேட்கச் சொல்லலாமே. ஒரு முயற்சி செய்யலாம். பலன் கிடைத்தால் நல்லது. மகனுக்கு திருமணம் ஆகி 7 வருடங்கள் ஆகிவிட்டன. அவனுக்கு வாரிசு வளர நான் என் பேர குழந்தைகளுடன் விளையாட எத்தனை நாள் காத்திருக்க வேண்டும் என்று தெரியாது. வருஷங்கள் போய்விட்டது. முயற்சி செய்து பார்ப்போம்.

அன்று மாலை

“கோதை பக்கத்து ஊரில் யாரோ ஒரு சாமியார் வந்திருக்கிறாராம். அவர் மக்கள் குறைகளைக் கேட்டு அவர்களுக்கு நல்லது செய்கிறாராம். குறைகளுக்குக் காரணங்கள் கண்டுபிடித்து அந்தக் குறைகளை நீக்குவதற்கு தேவையானபரிகாரங்கள் சொல்லுகிறாராம். அந்தப் பரிகாரங்களைச் செய்தால் குறைகள் நீங்குகிறதாம். எனக்கு சந்தையில் என் சினேகிதி ஒருவர் சொன்னார். உனக்கும் திருமணம் ஆகி ஏழு வருடங்கள் ஆகிவிட்டன. இதுவரையில் குழந்தை பாக்கியம் வரவில்லை. நீ ஏன் அந்த சாமியாரிடம் போய் கேட்க கூடாது?நீ சேகர் இடம் பேசி அனுமதி வாங்கிக் கொள். நான் வர முடியாது. என் சிநேகிதியை உன்னை அழைத்து செல்லும்படி சொல்கிறேன்.” என்றார் சந்திரா.

கோதை மெதுவாக, “அம்மா உங்களுக்குத் தெரியும். அவருக்கும் அவர் அப்பாவிற்கும் கடவுள் நம்பிக்கை கிடையாது. சாமியார்கள் என்றால் கோபமே வரும். இந்த நிலையில் அவரிடம் நான் என்ன கேட்டு சாமியாரிடம் செல்வதற்கு அனுமதி வாங்குவேன்?”

“ஏன் கோதை உனக்கு குழந்தை இல்லை என்று வருத்தமில்லையா?”

“இல்லையம்மா. எனக்கு எதிலும் எப்போதும் வருத்தம் வராது. பெருமாள் மேல் நம்பிக்கை அதிகம். அவர் எனக்கு எது கொடுத்தாலும் சரி தான். அவரை ஏன் கொடுத்தீர்கள் என்றோ ஏன் கொடுக்கவில்லை என்றோ கேட்பதற்கு எனக்கு அதிகாரம் கிடையாது, விருப்பமும் கிடையாது.”.

“என்னம்மா இப்படி பேசுற. உன் வயது பொண்ணு பேசுற மாதிரியா பேசுறே? குழந்தை வரலையே என்று கவலையே உனக்கு வரவில்லை என்றால் வேடிக்கையாக இருக்கிறது. உனக்கு வேண்டாம் எனக்கு பேரக் குழந்தை வேண்டும்.. எனக்காகப் போயிட்டு வா. அந்த சாமியாரிடம் போய்க் கேட்டு வா. உனக்காக இல்லாவிட்டாலும் எனக்காகவாவது இது செய்தால் எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும்.

“சரிம்மா உங்களுக்கு இந்தச் செயல் மகிழ்ச்சி தரும் என்றால் நிச்சயமாக செய்வேன்”.

அன்று இரவு படுக்கையில் படுக்கைக்கு செல்லும் முன் சேகரிடம் “உங்களிடம் ஒன்று பேச வேண்டும். முக்கியமான ஒன்று பேச வேண்டும். இப்பொழுது பேசலாமா?” என்று கேட்டள்

“என்ன கோதை, இப்படி கேக்குற? நீ எப்போது வேண்டுமானாலும் என்னிடம் பேசலாம். நான் உன்னை மிகவும் மதிக்கிறேன். நீ கேட்பதில் எல்லாவற்றிலும் நியாயம் இருக்கும் என்றும் தெரியும். தேவையில்லாமல் நீ எதையும் கேட்க மாட்டாய். அதையும் நான் நன்கு அறிவேன்.”.

“என்ன இப்படி சொல்லி விட்டீங்க. நீங்கள் என்மேல் வைத்திருக்கும் மதிப்பிற்கும் நம்பிக்கைக்கும் நன்றி.. பக்கத்து ஊரில் ஒரு சாமியார் மக்கள் குறைகளை கேட்டு அதற்கானக் காரணங்களை அறிந்து பரிகாரங்கள் கூறுகிறாராம். பரிகாரங்களைச் செய்தால் மக்களுக்குக் குறைகள் தீர்ந்து விடுகிறதாம். இதை உங்கள் அம்மா சிநேகிதி மூலம் தெரிந்து கொண்டார். என்னை சாமியாரைப் பார்த்து குழந்தை இல்லை என்ற குறையைச் சொல்லி ஏதாவது பரிகாரங்கள் செய்ய வேண்டுமா என்று கேட்கவும் சொல்கிறார். நான் போகலாமா? என்று உங்களிடம் அனுமதி கேட்கிறேன் “

“கோதை உன் கருத்து என்ன?”

“என் கருத்து என்றால்”

“சாமியாரிடம் போவது அவரிடம் எனக்கு குழந்தை இல்லை என்று சொல்வது. பரிகாரம் சொல்லச் சொல்வது.. அவர் சொல்லும் பரிகாரத்தை செய்வது. இதை எல்லாம் நீ நம்புகிறாயா?

“கடவுள் நம்பிக்கை உள்ள எவரும் நம்புவார். எனக்கு ஓரளவு நம்பிக்கை உண்டு. ஆனால் எல்லாச் சாமியார்களும் எப்போதும் எல்லாவற்றிற்கும் பரிகாரம் கூற முடியாது என்பதையும் நான் அறிவேன். இப்போது கூட இந்தக் குழந்தை விஷயத்தில் எந்த சாமியாரையும் பார்க்க எனக்கு ஆசை இல்லை. ஏனென்றால் எனக்கு என் பெருமாள்தான் எல்லாம். பெருமாள் குழந்தை கொடுத்தால் கொடுக்கிறார். கொடுக்காவிட்டால்

கொடுக்கவில்லை. அவரும் எதையுமே காரணமில்லாமல் செய்வதில்லை. அவருடைய சித்தம். என்னுடைய எண்ணங்களுக்கு அங்கு வேலையே இல்லை."

"பின் ஏன்அங்கு போக வேண்டும் என்று என்னிடம் கேட்கிறாய்"

"உங்கள் அம்மா கேட்கச் சொன்னார்கள். உங்கள் அம்மாவுக்கு இதில் ஆசை. என் ஆசையை விட அம்மாவின் ஆசை முக்கியம். அம்மாவுக்கு நான் வேறென்ன செய்ய முடியும்? அவர்கள் ஆசைப்படுவதை முடிந்தால் செய்தால் அது எனக்கு பெரிய கடமை ஆகும்."

"நான் உன் கூட வர முடியாது தெரியுமா?"

"எனக்குத் தெரியும். அம்மாவுக்கும் தெரியும்.. அம்மா அனுமதி மட்டும் வாங்கிக் கொள். நானும் வரமாட்டேன். சினேகிதியிடம் சொல்லி உன்னை அழைத்துப் போக சொல்லுவேன். அவர்கள் உன்னை அழைத்துச் சென்று சாமியாரை பார்த்து விட்டு திரும்பி வரும் வரை உனக்கு துணையாக இருப்பார்கள் என்று சொல்லிவிட்டார்கள்"

"நாளை சொல்லலாமா"

"சரி"

சேகர் தனது பிரத்யேகமான தலைக்குமேல் உள்ள லைட்டைப் போட்டான். அவன் மட்டும் அந்த விளக்கின் வெளிச்சத்தில் படிக்கலாம். அவன் மனைவிக்கு அதனால் தொந்தரவு இருக்காது. அவன் படுப்பதற்கு முன்பு அரைமணியாவது படிக்கும் வழக்கத்தை கோதை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறாள். அவன் படிக்கும் முன் அவளை திரும்பி பார்த்தான்.

அவள் அழகிய முகம் அவனுக்கு சென்ற நாட்களை நினைவுறுத்தியது.

கோதை சற்று விலகிப் படுத்துக் கொண்டாள். நாளெல்லாம் வேலை செய்த களைப்பு அவளை உடனே உறக்கத்தில் ஆழ்த்தியது. பெரியாரை நினைத்துக் கொண்டான். அவர் ஒருவரையும் மனத்தளவில் புண்படுத்தக் கூடாது என்று சொல்லுவார். அவன் மனதுக்குள் சிரித்துக் கொண்டான். ஆனால் அவர் எவ்வளவு பேரின் மனத்தைக் காயப்படுத்தியிருக்கிறார். அதை அன்று கோதை சொல்லிக்காட்டினாள். பெரியார் சொல்வது போல் ஆராய்ந்தால் காதல் என்பது கத்தரிக்காய் மாதிரிதான். ஏதோ ஆயிரத்தில் இல்லை லக்ஷத்தில் ஒருவருக்கு வேண்டுமானால் தெய்வீகக் காதல் அது இது என்று ஒத்துக்கொள்ளலாம். மற்றபடி நான் அவளை சந்திக்காமல் இருந்திருந்தால் அவள் யாரையுமே திருமணம் செய்து கொள்ளாமலிருப்பாளா? என்னைத் தேடி தேடி அலைவாளா? ஏன் நான் தான் ஆகட்டும். அவள் இல்லை என்றால் வாழ்வே இல்லை என்று காம வெறியில் அம்மாவிடம் ஏதேதோ பிதற்றினேனே. நான் மட்டும் கொள்கையில் அவ்வளவு பிடிப்புள்ளவனாகவா இருந்தேன். கடவுளையே நம்பும் பெண் சரிப்படாது என்று ஏன் சொல்லவில்லை. கொள்கைப் பிடிப்பு என்பதை ஆணின் எதேச்சிகார வெறி.. பெண் – தன்னை மணக்க இருக்கும் பெண் – தான் சொல்வதைத், தான் செய்ய வேண்டும். அவள் நினைப்பதை, அவள் எண்ணம் எப்படி இருந்தாலும் – அதை வெளியே சொல்லக்கூட உரிமை கிடையாது. மற்றவர்கள் எண்ணங்களை மிதித்து, துவை த்து, செயல்படுவதைக் கண்டு தன் மனதுக்குள் தனக்கு தன் ஆண்மைக்குக் கிட்டிய வெற்றியாக கொண்டாடி உள் மனதுக்குள் களிக்க வேண்டும். இது தவறு என்று ஒத்துக்கொள்ளும் பக்குவம் ஆண் சமூகத்திற்கு வராதது தவறு தான்.”சே, அதிகமாக ஆராய்ந்தால் எஞ்சுவது துக்கம்தான். மு. வ. வின் கருத்து

எங்கேயோ படித்த மாதிரி இருந்தது.. விளக்கை அணைத்து படுக்கையில் படுத்தான். தூக்கம் வந்தால் தானே. அது விட்ட இடத்திலிருந்து சரியாகத் தொடர்கிறது. எதற்கெல்லாம் மெஷின் கண்டு பிடித்து விட்டான். இந்த மனதை நாம் சொல்லும் போது நிறுத்துவதற்கு இன்னும் மெஷின் கண்டுபிடிக்கவில்லை. இப்போது என் சிந்தனையே சற்று விரிவடைந்திருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். உண்மையிலேயே இந்த மாற்றத்துக்கு உரியவள் அருகில் படுத்துக்கிடக்கிறாள். பெரு மகிழ்ச்சியுயைடன் அவள் தலை முடியைக் கோதி விட்டான். எப்போது தூங்கினான் என்பது அவனுக்குத் தெரியாது.

காலையில் எழுந்து அவளைப் பார்த்தான். அவள் தனது தினசரிப் பணிகளைத் தொடங்கி விட்டாள். இதில் ஒன்றும் புதிது இல்லை. நேரம் கழித்து படுக்கும் அவனும், நேரத்திலே எழும்பும் அவளும் பழகிப் போனவைதான். காலையில் குளித்து விட்டு காப்பியுடன் வந்து நின்றாள். அன்றலர்ந்த தாமரை போல் முகம் முதல் நாள் பிணக்கங்கள், ஏமாற்றங்களை சுத்தமாக துடைத்து எறிந்து விட்ட குழந்தை முகம். அவனுக்கு அவளுடைய இந்த இனிமையான குணம் ரொம்பவும் பிடிக்கும்.

மறுநாள் படுக்கவரும்போது “அப்படி என்றால் நீ போய் வரலாம்” என்றான்.

“இல்லை. தயவு செய்து உங்கள் தந்தையிடமும் இதுபற்றி பேசுங்கள். தேவையில்லாமல் வீட்டிற்குள் குழப்பத்தை உண்டாக்க வேண்டாம்”

“அவர் போக வேண்டாம் என்று சொன்னால்”

“நான் போகமாட்டேன். நான் தான் முன்னமே சொன்னேனே. எனக்கு இதில் ஒரு பாதிப்பும் இல்லை. என்ன.

அம்மா என்னிடம் கேட்டு முடியாமல் போய்விட்டது என்று வருந்துவேன். அதைத் தாண்டி எனக்கு வேறு ஒன்றும் இல்லை "

"உன் அணுகுமுறை மிகவும் பிடித்து இருக்கிறது. சரி நான் அப்பாவிடம் கேட்டு நாளை இது பற்றி சொல்லி விடுகிறேன் "

"அப்பாவிடமும் இது பற்றி பேசினேன். அப்பாவும் ஒரு அரை மனதோடு இதற்கு ஒத்துக்கொண்டார்"

இரண்டு நாட்கள் கழித்து பாலாயியின் ஸ்நேகிதியைத் துணைக்கு அழைத்துக் கொண்டு ஐந்து மைலுக்கு அப்பால் இருக்கும் சாமியாரைக் காணப்புறப்பட்டாள்.

"வரேங்க" குரல் குடுத்துச் சென்றாள்.

"சீக்கிரம் திரும்பி விடு"

அவனும் அவள் நோகா வண்ணம் விடையளித்தான்.

சமீபத்தில் பெய்திருந்த மழையினால் நிறைய வீடுகளில் மின் தடை ஏற்பட்டிருந்தது. வேலைப்பளு ஜாஸ்தியாகவே இருந்தது.

"இங்கிலீஷ் காரன் காலத்திலே போட்ட ஒயர்களை மாற்றாமல் வைத்துக் கொண்டு நம் கழுத்தை அறுக்கிறார்கள். ஏம்மா, மழை காலத்தில் எல்லா லைட்டையும் எல்லா பேனையும் போட்டு ஒவர்லோட் செய்கிறீர்கள்" என்று பலவாறு முணு முணுத்துக் கொண்டே வேலையை கவனித்தான்.

இடையில், கோதை நினைவு வந்தது. அவள் சாமியாரிடம் போயிருப்பாளா? அவர் என்ன சொல்லுவார்? அவன் போகவில்லையே தவிர சாமியாரைப் பற்றி பலபேர் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறான்.

அவர் என் கொள்கையைப் பற்றி ஏதாவது சொல்லக்கூடுமோ? அதை என் கோதை அப்படியே

எடுத்துக்கொள்வாளோ? மேலும் ஏதாவது என்னை வற்புறுத்துவாளோ? அல்லது எங்கள் இல்வாழ்க்கையில் ஏதாவது விரிசலை ஏற்படுத்திவிடுமோ?

சிந்தனை அடுக்கு அடுக்காக வந்தது. தீர்வு தெரியவில்லை தலையைத் தான் வலித்தது.

உடல் நிலை சரியில்லை என்று ஆபிஸரிடம் சொல்லிவிட்டு ஒரு மணி முன்னதாகவே கிளம்பினான். தெரு முனையிலேயே வீடு திறந்திருப்பதைக் கண்டு கொண்டு சைக்கிளை வேகமாக மிதித்தான்.

“வாங்க, வாங்க, என்ன இன்றைக்கு சீக்கிரமே வந்து விட்டீர்கள்”

மனைவி உற்சாகமாகவே வரவேற்றாள்.

சே! நம் எண்ணங்களும், கற்பனைகளும் ரொம்ப மோசம். நமக்கு ஏன் நல்ல சிந்தனைகளே வரமாட்டேன் என்கிறது என்று தன்னையே நொந்து கொண்டான்.

“சாமியாரைப் பார்த்தியா? அவர் ஏதாச்சியும் சொன்னாரா?”

அவன் கேள்வியைப் பார்த்து கோதை திகைத்தாள். அவள் தன் கணவன் இதைப்பற்றி ஆர்வம் காட்டுவார் என்றோ,, அதைப்பற்றி விசாரிப்பார் என்றே கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

“அவர் என்னவோ சொல்கிறார், அதை விடுங்கள் உள்ளே வந்து காபி குடியுங்கள்” கோதை உள்ளே முன்னால் சென்றாள்.

அவள் அவ்விதம் சொன்னது அவனுடைய ஆர்வத்தைத் தூண்டவே செய்தது.

“சாமியாரையும், கடவுளையும் நம்பினால் குழந்தை பிறக்குமாடி இந்த விஞ்ஞான உலகத்திலே. உன்னை மாதிரி பத்தாம்பசலிகள் இருப்பதால் தான் நாடே கெட்டுப் போகிறது.”

அவளிடமிருந்து மேலும் அறிய எண்ணி அவளை வேண்டுமென்றே சீண்டினான்.

“கணவனை நம்பித்தான் 7 வருஷங்கள் இருந்தேனே. இந்தக் கணவனுக்கும் ஏன் பிறக்கவில்லை என்று தெரியவில்லை”.

இந்த நேரடித்தாக்குதலை அவன் எதிர்ப் பார்க்கவில்லை. அவள் மௌனமாக இருந்து விடுவாள். அல்லது சாமியாரை பற்றி மேலும் விபரங்கள் சொல்வாள் என்று தான் இருந்தான்.

“மருத்துவரிடம் போகவேண்டிய விஷயம் இது. மந்திரத்தால் தீர்க்க முடியாது இது.”

அவனும் கோபத்துடனே பேசினான்.

“நாமும் மருத்துவரைக் கலந்து ஆலோசித்தோம். முதலில் இரண்டு பேர்கள் கொஞ்சம் நாட்கள் போனால் சரியாகி குழந்தை பிறக்கும் என்றார்கள். இன்னும் இரண்டு பேர் “உடம்பு சரியாகத் தான் இருக்கிறது. ஏன் பிறக்கவில்லை” என்று நம்மிடமே கேள்வி கேட்டார்கள். ஒரு லேடி டாக்டர் எனக்கு ஆப்பரேஷன் பண்ண வேண்டும் என்றார். ஒரு டாக்டர் உங்களை இன்னும் விரிவாகப் பரிசோதனை செய்ய வேண்டும் என்றார். இதில் எந்த டாக்டரை நம்பப்போகிறீர்கள். எந்த சிகிச்சை செய்து கொள்ளப் போகிறீர்கள்?”, அவள் மேலும் பேசினாள்

அவள் பேச்சு நியாயங்கள் நிறைந்ததாக இருந்தது. மேலும் இதே திசையில் பேச்சை வளர்த்தினால் மனக்கசப்பை வளர்க்கும் என்று எண்ணினான். பேச்சின் திசையை மாற்ற வேண்டும் என்று புரிந்து கொண்டான்'.

“கோதை ஏன் இன்று எவ்வளவு கடுமையாக இன்று இருக்கிறாய்? சாமியார் என்ன சொன்னார் என்று கேட்க வந்தால் ஏன் சம்பந்தமில்லாமல் ஏதேதோ பேசுகிறாய்.”

சேகரின் பேச்சில் மாறுதல் கண்டாள். அவள் புத்திசாலிப் பெண். பழைய பேச்சின் கசப்பான உண்மைகளையும், அவளது வாதத்தியும் திரும்பி எடுத்துக் கூறி சேகர் நல்ல எண்ணத்தோடு தொடரும் பேசும் சூழ்நிலையை கெடுக்க அவள் தயாராக இல்லை.

நானும் ஏதேதோ பேசிவிட்டேன். அம்மாவுக்காகத்தான் போனேன். ஆனால் அங்கு பார்த்தது என்ன? எவ்வளவு பேர்கள் அங்கு தொட்டில் கட்டி விட்டிருந்தார்கள் தெரியுமா? அங்கு வந்தவர்களிடம் பேச்சு கொடுத்திருந்தேன். நாம் தெரிந்தோ, தெரியாமலோ பல தவறுகள் செய்கிறோமாம். தவறுகள் செய்யும்போது அவைகள் அப்படியே நின்று விடுவதில்லை. தமிழில் சொல்லுவதில்லையா.”வினை விதைத்தவன் வினை அறுப்பான். நன்றும் தீதும் பிறர் தர வாரா “ என்று. சாமியார் அந்த வினைகளை அறிந்து அதைத் தீர்க்க என்ன செய்ய வேண்டும் என்று சொல்கிறாராம்.

“அது சரி. சாமியார் நமக்கு என்ன சொன்னார் எப்போது பிறக்கும் என்றார். நமக்குக் குழந்தை பிறப்பதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்று சொன்னாரா? அடுத்த மாதமா இல்லை இன்னும் இரண்டு மாதம் கழித்தா?”

பாதி கிண்டலும், பாதி ஆவலுமாய் இருப்பவன் போல் நடித்தான்.

“சே இந்த கிண்டலில் ஒன்றும் குறைச்சல் இல்லை. உங்களையும் பார்க்கவேண்டும் என்று சொன்னார்”

“என்ன மெய்யாலுமா”

“ஆமாங்க எனக்கே அவர் சொல்லும் பொழுது கொஞ்சம் கஷ்டமாகத் தான் இருந்தது”

“நீ என்ன பண்ணப் போற”

“.அம்மாவிடம் சொல்லப்போகிறேன்”

“அம்மா என்ன சொல்வார்கள் என்று எதிர்பார்க்கிறாய்”

“உங்களுக்கே தெரியும். என் வாய் வழியாக வரவேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள் அம்மா உங்களையும் கூட்டிக்கொண்டு சாமியாரை பார்க்கச் சொல்வார்கள்.”

“நான் வரவில்லை என்றால் என்ன பண்ணுவாய்?”

அம்மாவுக்காக நான் முதலில் சொன்ன உடன்பாட்டைச் செயல் படுத்துவேன்”

“எனக்கு புரியவில்லை”

“என்னோடு நீங்கள் சாமியாரை பார்க்க வாருங்கள் என்று சொல்லி பெருமாள் பெருமாள் என்று இரு தடவை சொல்லிவிடுவேன் என்று சொல்லி உரக்கச் சிரித்தாள்”

சேகருக்கு அவளுடைய செயல் பெருமையாக இருந்தது அவள் எதையும் சாதிக்கும் பெண் என்று புரிந்து கொண்டான்.

“இதை மட்டும் ஏன் அப்பாவிடம் கேட்டு சொல்லுங்கள் என்று சொல்லவில்லை”

“முதலிலேயே நான் போவதற்கே அவருக்கு அரைமனது தான் சம்மதம். இந்த அரை மனது சம்மதத்தை வைத்து நான் சென்றேன். இப்போ நான் உங்களையும் கூட்டிக் கொண்டுப் போக வேண்டும்

என்றால் அவர் நிச்சயமாக ஒத்துக் கொள்ள மாட்டார். அவரை ஒத்துக் கொள்ள வைப்பது உங்கள் பொறுப்பு என்று உங்கள் தலையில் கட்டி விட்டேன்"

"என்னை பெரிய சிக்கலில் மாற்றி விட்டாய்"

"இல்லை. அப்படியெல்லாம் இல்லை. அம்மாவிடம் இது பற்றி பக்குவமாக சொல்லுங்கள். அம்மா அப்பாவிடம் இதமாகச் சொல்லி அழைத்துச் செல்வதற்கு அனுமதி வாங்கி விடுவார்கள். எனக்கு அம்மாவின் திறமையின் மீது அசாத்திய நம்பிக்கை உண்டு. அப்பாவும் பிறருக்காக வளைந்து கொடுக்கிறவர்தான். எனக்காக பெரியாரையே. ரூமுக்குள்ளே வைத்தார் இல்லையா?"

"சரி முயற்சி செய்கிறேன்."

"நானே அப்பாவிடம் பேசி விட்டேன். அவர் ஒன்றே ஒன்று மட்டும் கேட்டார். நானோ, நீயோ, இல்லை அம்மாவோ கோதைக்கு குழந்தை கிடைக்க வேண்டும் என்று கேட்கக் கூடாது. அவராகவே கண்டுபிடித்து சொன்னால் கேளுங்கள். மற்றபடி நீங்கள் ஒரு பார்வையாளரை போல் பார்த்து விட்டு வந்து விடுங்கள் என்று சொல்லிவிட்டார் "

"அம்மாவுக்கு சரியாக படவில்லை. நாம் ஏன் பார்வையாளராக போக வேண்டும்? என்ன வேடிக்கையா பார்க்க போறோம்?" என்று சொன்னார்.

"அப்படி இல்லை. அம்மா சாமியார் நம் குறையை தெரிந்து வைத்திருக்க வாய்ப்புகள் உண்டு. ஏதாவது கேட்டால் நாம் அது பற்றி கூறலாம். அவர் அப்படி எதுவும் கேட்கவில்லை என்றால் நமக்கு ஒரு சாமியாரை பார்த்தோம் என்ற திருப்தியுடன் வந்துவிடலாம்". என்றாள் கோதை.

அம்மாவும் போவதால் ஒரு காரை ஏற்பாடு செய்து கொண்டு செல்லுங்கள். அம்மாவால் பஸ்ஸில் ஏறி இறங்கி வர முடியாது என்றும் சொன்னார்.

அவர்கள் மூவரும் காரின் சென்றார்கள்.

“கோதை நான்தான் நம் குறை பற்றி எதுவும் கூறக்கூடாது என்று அப்பா சொல்லிவிட்டார். நானும் சொல்லப்போவதில்லை. நீயும் சொல்லப்போவதில்லை. வரிசையில் சென்று அவரிடம் எதுவுமே கேட்காமல் சும்மா நின்று விட்டு வருவதா? நான் ஏதாவது கேட்கலாமா?”

“அது உங்கள் விருப்பம். நீங்கள் எது வேண்டுமானாலும் கேட்கலாம்.”

“நான் என்ன கேட்கப்போகிறேன் என்று கேட்க மாட்டாயா?”

“கேட்கமாட்டேன் எனக்கு தேவை இல்லை. உங்கள் விருப்பம் நீங்கள் என்ன வேண்டுமானாலும் கேட்கலாம். நான் உங்கள் மனைவி. நான் கேட்க விரும்பினால் அதை உங்களிடம் சொல்ல வேண்டும். அதுதான் இப்போதைய நடைமுறை.”

“நான் எப்போது கார் வாங்குவேன் என்று கேட்பேன்?”

“தாராளமாக கேளுங்கள். கேட்கக் கூடாது என்று சொல்வதற்கு நான் சாமியாரின் ஏஜென்டா?”

இவர்களுக்கு முன்னால் ஒரு பெரிய பேங்க் அதிகாரி நின்று கொண்டிருந்தார்.

பேங்க் அதிகாரி கோதையைப் பார்த்து “நீங்கள் எதற்கம்மா வந்திருக்கிறீர்கள்? தெரிந்து கொள்ளலாமா?” என்று கேட்டார்.

“இல்லை சாமியார் பக்கத்தில் இருக்கிறார். அவரைப் பார்த்து விட்டுப் போகலாம் என்று தான் வந்தோம்”.

அவர் கேட்டதனால் “நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள்? நான் தெரிந்து கொள்ளலாமா?” பதில் கேள்வி கேட்டாள்.”

“என் பெயர் ரகு. நான் அரசாங்க பாங்கில் அதிகாரியாக வேலை செய்கிறேன். எனக்கு வயிற்று வலி நீண்ட நாட்களாக இருக்கிறது. மருத்துவர்கள் பார்த்து விட்டார்கள் நான் பேங்கில் வேலை செய்வதால் பேங்க் எனக்கு மருத்துவ செலவை கொடுக்கும். நிறைய செலவு செய்து பல மருத்துவர்களைப் பார்த்து விட்டேன். ஒருவரும் சரியாகச் சொல்ல மாட்டேன் என்கிறார்கள். இந்த மருந்து சாப்பிடுங்கள் சரி இல்லை என்றால் இன்னொரு மருந்து தருகிறேன். அதுவும் சரி இல்லை என்றால் இந்த சோதனை அந்த சோதனை என்று நாள் கடத்துகிறார்களே தவிர என் வயிற்று வலி குணமாகவில்லை பணமும் நேரமும் செலவானது தான் மிச்சம். எல்லா டாக்டர்கள், எல்லா டெஸ்ட் முடித்து கிட்டத்தட்ட 500000 ரூபாய் செலவு செய்து கடைசி முயற்சியாய் இந்த சாமியாரிடம் என் வயிற்று வலி குணமாகும் என்று நம்பி வந்திருக்கிறேன்”

“இந்த விபரங்கள் அவர் சொல்லக் கேட்டு சேகர் “இவரைப் போன்ற நல்ல படித்தவர்களே அறிவுபெற்றவர்களே இந்த மாதிரி சாமியாரிடம் வரும் போது படிக்காத பாமரர்களைப் பற்றி பேசுவதற்கு என்ன இருக்கிறது. நாம் வெறுமனே வேதனைப் பட்டுக்கொண்டு இருக்க வேண்டியதுதான்”.

சேகர் முணுமுணுத்தது கோதையின் காதில் விழுந்தது.

கோதை சேகரை ஒரு பார்வை பார்த்து சும்மா இருக்கும்படி சைகை செய்தாள்.

“உங்கள் நம்பிக்கை நிறைவேறட்டும்” என்று புன்முறுவலோடு சொல்லி முடித்தாள்.

ரகு சாமியாரிடம் செல்லும் முறை வந்தது

சாமியாரிடம், "பல நாட்களாக வயிற்று வலி இருக்கிறது பல மருத்துவ மனைகளில் வைத்தியம் செய்து பார்த்து விட்டேன் காசும் நேரமும் தான் போகிறதே தவிர வயிற்று வலி குணமாகவில்லை

தான் கலந்த டாக்டர்கள் பட்டியல், எடுத்துக்கொண்ட டெஸ்டுகள், மருந்துகள் ரொம்ப அதிகமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் பேசியது அவருக்கு இந்த மட்டில் யாராலும் கண்டு பிடிக்க முடியாத வியாதியாக தனக்கு வந்தது என்று பெருமையுடன் அறிவிப்பது போல் இருந்தது. பாங்கு எவ்வளவு தாராளமாகச் செலவு செய்தது என்று பாங்கின் புகழையும் அடிக்கடி பாடினார். கடைசியாக தாங்கள் என் வயிற்று வலியை குணம் செய்தால் எனக்கு மிகவும் உதவியாக இருக்கும்" என்று முடித்தார்.

"நீ பெரிய பெரிய டாக்டர்கள் வெளிநாட்டில், உள் நாட்டில் படித்தவர்களை ஆலோசித்திருக்கிறாய். நான் ஏதோ கிராமத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். அவர்களால் செய்ய முடியாததையா நான் செய்து விடப்போகிறேன். அல்லது அப்படி நீ எதிர் பார்க்கிறாயா?" – சாமியார் தொடர்ந்தார்.

"சாமியாரைப் பற்றி எல்லோரும் சொல்லுகிறார்கள். உங்கள் அருள் இருந்தால் சரியாய்ப் போய்விடும் என்ற நம்பிக்கை இருக்கிறது"

"நம்பிக்கைதான் முக்கியம். நான் எதோ சொல்லுவேன். நீ அதை செய்து குணமானால் அதற்குக் காரணம் உன் நம்பிக்கைதான்"

"உன் தாயார் இருக்கிறாரா"

சற்று நேரம் யோஜனை செய்து சாமியார் கேட்டார்.

"இல்லை"

“தாயாரைச் சார்ந்தவர்கள் யாராவது இருக்கிறார்களா” – கேள்வி தொடர்ந்தது.

“தாயாரின் மூத்த சகோதரி ஒருவர் இருக்கிறார்”.

“அவரும் உனக்குத் தாயார் மாதிரிதானே?”.

“ஆமாம்”.

“அவர் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறார்?”.

“அவர் இப்போது காசியில் இருக்கிறார். அவருக்கு குழந்தைகள் யாரும் இல்லை. கணவரும் இறந்து விட்டார். ஆகையால் காசியில் சென்று வயிறு வளர்க்கிறார்.”

“இப்போதுதான் அவர் உனக்குத் தாயார் மாதிரி என்று நீயே சொல்லுகிறாய். அவருக்குக் குழந்தைகள் இல்லையென்று சொல்றே. நீ போய் அவரைக் கூப்பிட்டுக் கொண்டு உன்னோடு வைத்துக்கொள். வைத்தியத்தை பிறகு தொடங்கு “.

சரி சரியென்று தலையாட்டினார் ரகு.

ரகுவின் முகத்தில் நம்பிக்கையின் ரேகைகள் தெரிந்தன.

“இவர் யாரு?” கேள்வி சேகரைப் பற்றியது.

“நான் சேகர். இவள் என் மனைவி கோதை. அவர் என் அம்மா.”

“உங்களுக்கு என்ன வேண்டும் “.

சாமியார் சற்று வித்தியாசமாகப் பார்த்தார்

“சீக்கிரத்திலேயே நான் காரில் வர அருள் புரியவேண்டும்”.

இந்த கேள்வி கோதையையும் அவன் அம்மாவையும் திகைக்க வைத்தது.

சாமியார் சிரித்துக் கொண்டே “இப்போதே நீ காரில் தானே வந்திருக்கிறாய்”

சாமியார் சிரித்தாலும் சேகரை உற்றுப் பார்ப்பதை சேகர் உள் உணர்வு உணர்த்தியது.

“இது என் கார் அல்ல. நான் எனக்கென்று கார் வைத்துக்கொண்டு வர வேண்டும் “

“நீங்கள் என்ன வேலை செய்கிறீர்கள்? உங்களுக்கு என்ன சம்பளம்?”

சாமியார் சற்று நிதானத்துக் கேட்டார்.

“நான் மின்சார வாரியத்தில் இருக்கிறேன். எனக்குப் பிடித்தம்போக 16000 ரூ வாங்குகிறேன்.

“வருஷத்திற்கு கார் இன்சூரன்ஸ் எவ்வளவு தெரியுமா? டாக்ஸ் எவ்வளவு தெரியுமா?”

“எவ்வளவோ லாட்டரி சீட்டு நடத்துகிறார்கள். உங்களால் எனக்கு ஒரு பரிசு விழுந்தால் நீங்கள் சொல்லும் விஷயங்கள் ஒரு பேச்சே இல்லை”.

“அப்படின்னா உனக்கு லாட்டரிச் சீட்டில் பரிசு விழ நான் அருள் செய்ய வேண்டும். அதெல்லாம் செய்ய ஆரம்பித்து விட்டால் இங்கு கூட்டம் எவ்வளவு வரும் தெரியுமா? அப்புறம் நான் லாட்டரி சீட்டு சாமியார் ஆகி விடுவேன் “– சாமியார் உரக்கச் சிரித்தார்.

அவர் சேகரை மீண்டும் ஊடுருவிப் பார்த்தார்.

ஏன் இந்த மாதிரி விபரீதக் கேள்வியைக் கேட்கிறே என்று கேட்பது போல் கோதைக்குத் தோன்றியது.

திடீரென்று பார்வையை மாற்றி “நிச்சயம் வருவாய்.”நீங்கள் வந்த காரியம் என்ன என்று எனக்குத் தெரியும். அடுத்தமுறை சொல்லுவேன்.”

“என்ன நாம் எதற்காக வந்து இருக்கோம் என்று தெரியும் என்று சொல்லிவிட்டாரே. அதைப் பற்றி ஏன் சொல்லவில்லை?”

காரில் திரும்பி வரும்போது சந்திரா ஆரம்பித்தார்.

“அம்மா லாட்டரியில் பரிசு விழ வேண்டும் என்று சொன்னேன். நமது தமிழ்நாட்டில் லாட்டரி சீட்டு தடை செய்து எத்தனையோ வருஷங்கள் ஆகிவிட்டது. பாவம் அந்த விஷயம்கூட அவருக்கு தெரியவில்லை. நான் லாட்டரி சீட்டு எப்போது வாங்க போகிறேன்? எப்போ பரிசு கிடைக்கும்?. கோதை கேட்டா. கோதையைக் கூட்டி வந்தாச்சு. விஷயம் முடிஞ்சு போச்சு. இதை அப்படியே விட்டு விடலாம். என்ன கோதை நீ என்ன சொல்றே?”

“எனக்கு சொல்வதற்கு ஒன்றும் இல்லை. நீங்கள் எது சொன்னாலும் எது செய்தாலும் எனக்கு உடன்பாடுதான்.”

வீட்டிற்கு வந்து சேர்ந்தார்கள்.

ராசநாயகம் சேகரிடம் “என்னப்பா சாமியார் என்ன சொன்னாரு?”

“சாமியாரிடம் நான் காரில் வரவேண்டும் என்று கேட்டு விட்டேன்.”

“அப்படியா என்னடா சொன்னாரு? அடுத்த தடவை காரில் வருவேன்னு சொன்னார்”.

“நாம் எதற்கு வந்தோம் என்று தெரியும் என்று சொல்லிவிட்டாரே. அதைப் பற்றி ஏன் சொல்லவில்லை” சந்திரா ஆரம்பித்தார்.

அதற்கு மேல் ராசநாயகத்திற்கு அதில் சுவாரஸ்யம் இல்லை. அங்கிருந்து நகர்ந்தார்.

சாமியாரை பார்த்து விட்டு வந்து சில மாதங்கள் சென்று விட்டன. எல்லோரும் அந்த விஷயத்தை முற்றிலும் மறந்து விட்டார்கள். சேகர் வேலை செய்யும் இபி ஆபிஸில் ஒருவருக்கு கல்யாணம். எல்லோருக்கும் பத்திரிகை வைத்தார்.

“கல்யாணம் பெங்களூருலேடா. நம்ம எல்லாம் சேர்ந்து ஜாலியா ஒரு ட்ரிப் போயிட்டு வரலாமா?”

நண்பர்கள் கேட்க அதுவும் திருமணம் ஞாயிற்றுக்கிழமையாக இருந்ததனால் சனிக்கிழமை கிளம்பி ஞாயிறன்று கல்யாணத்தில் கலந்து கொண்டு ஞாயிறு இரவு கிளம்பி திங்கட்கிழமை அலுவலகத்துக்கு வருவதற்கு வசதியாக ஒரு வேன் எடுத்துக் கொண்டார்கள்

“கோதையைக் கூட்டிட்டு போகலாமா?” மெதுவா ஆரம்பிச்சான். சேகர்.

“வேணாம்பா. நீ நண்பர்கள் கூட போற. உன் நண்பர்கள் குடிக்கலாம். அதுவும் போய்விட்டு உடனே திரும்ப வேண்டும். அவளுக்கு இந்த மாதிரி அவசரமாக போக வேண்டாம். நண்பர்களுடன் அதுவும் ஒரு நாள் ட்ரிப்புக்கு வேண்டாம். நீ தனியா லீவு போட்டு அவளை பங்களூக்கு கூட்டிப்போகலாம்”“ என்று அடித்து சொல்லிவிட்டார் சந்திரா.

கல்யாண வாசலிலேயே ஏதோ ஒரு லாட்டரி சீட்டு வியாபாரம் நடந்து கொண்டிருந்தது. நாளைக்கே குலுக்கல். உடனே வாங்குங்கள். அதிர்ஷ்டம் அழைக்கிறது. லட்சாதிபதி ஆகுங்கள். ஒரு சீட்டு 10 ரூபாய். உடனே வாங்குங்கள். திருமண மண்டப வாயிலில் ஒருவன் கூவிக்கூவி வித்துக்கொண்டிருந்தான். நண்பர்கள் “ஆளுக்குப் பத்து ரூபாய் போட்டு கூட்டா லாட்டரி

சீட்டு வாங்கலாம். பரிசு விழுந்தால் பகிர்ந்து கொள்ளலாம் என்று முடிவு செய்து 70 ரூபாய்க்கு லாட்டரி சீட்டு வாங்கினார்கள். லாட்டரி சீட்டு சேகர் கிட்ட கொடுக்கலாம். அவன் தான் குடிக்கவே மாட்டான். நம்ம பெங்களூர் வந்துவிட்டு குடிக்காமல் போனால் நமக்கு கேவலம்"

நண்பர்கள் போனில் சீட் போட்டோ எடுத்துக் கொண்டார்கள்.

திருமணம் முடிந்து விட்டது..

நைட்டு ஊருக்குப் போகணும். காரில் போக வேண்டும். போகும்பொழுது வாந்தி எடுத்து யாரும் கலாட்டா செய்யக்கூடாது. என்று. அதற்காக குடிப்பவர்கள் அதிகமாக குடிக்காமல் அளவோடு குடித்து செல்லலாம். ஒரு மனதாக தீர்மானம் நிறைவேற்றப்பட்டது..

கல்யாணம் முடிச்ச கையோடு சாப்பிட்டுவிட்டு மதியம் 2 மணிக்கு குடிக்கக் கிளம்பி விட்டார்கள். எவ்வளவோ சொல்லியும் அவர்களோடு செல்லமறுத்துவிட்டான். சேகர் செல்லவில்லை மண்டபத்தில் இருந்தான். ஐந்து மணிக்கு போதை ஓரளவு தலைக்கு ஏறிய அளவில் காரில் வந்து சேர்ந்தார்கள்..

காரில் கிளம்பி ஊருக்கு வந்து சேர்ந்தார்கள்.

மறுநாள் காலையில் ஊருக்கு போய் சேர்ந்தவுடன் ராசநாயகம் "நடராஜ் மாமாவுக்கு உடம்பு சரியில்லை. ஆஸ்பத்திரியில் சேர்த்து இருக்கிறார்கள் போன் வந்தது. நீ வருவதற்காகக் காத்திருக்கிறோம். நீ குளித்து விட்டு வா. உடனே கிளம்பலாம் என்று சொல்லி காரில் கிளம்பினார்கள்.. சேகர், கோதை, ராசநாயகம், அம்மா நால்வரும் கிளம்பிச் சென்றார்கள்.

சேகர் இரவு வெகு நேரம் கழித்து வந்ததால் சரியான உறக்கம் இல்லை. காலையில் கிளம்பும் முன்னே அவன் முதல் நாள்

அடைந்திருந்த அணிந்திருந்த பேண்ட் சர்ட் களை கோதை வாஷிங் மெஷினில் போட்டு விட்டு மாமாவைப் பார்க்கத்தயாரானாள்.

எல்லோரும் நடராசன் மாமா வீட்டுக்கு சென்றார்கள். மாமாவை ஆஸ்பத்திரியில் பார்த்தார்கள். மாமாவுக்கு ட்ரிப்ஸ் ஏத்தி உடலை பரிசோதித்து கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை என்று சொல்லி டிஸ்சார்ஜ் செய்து விட்டார்கள். எல்லாரும் திரும்பி வரும்போது வீட்டு வாசலில் ஒரே கூட்டம். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவனுடன் பெங்களூர் சென்று வந்த நண்பர்கள் இருந்தார்கள்.

வீட்டு வாசலை அடைந்தவுடன் "என்னடா காலையில் இங்கு வந்திருக்கிறீர்கள்?" சாதாரணமாக சேகர் ஆரம்பித்தான்.

"சேகர் நீ ரொம்ப அதிர்ஷ்டசாலிடா" ஆபிஸ் நண்பர்கள் அவனை சூழ்ந்து கொண்டார்கள்.

அவன் பசி, களைப்பு அவனை ரசிக்க விடவில்லை.

"எல்லாம் நாளைக்குப் பார்த்துக்கலாம். நீங்க எல்லோரும் இப்போ போங்க". அவன் குமுறினான்.

"பார்த்தீங்களா, என்ன தெனாவட்டா பேச்சு விடுறான். போகாதீங்கடா " என்றான் அவனுடன் வேலை செய்யும் சௌரி.

"என்ன சொல்றீங்க" – கடிந்தான் சேகர்

"நீங்கள் போய் அரைமணி நேரம் கழித்து வரக்கூடாதா? அவர் சாப்பிடக்கூட இல்லை" கோதை கெஞ்சினாள்.

"நீ உள்ளே போ, என்ன விஷயம் சொல்லித் தொலைங்கடா" என்று அலுத்துக்கொண்டான் சேகர்.

"டேய் முதலில் சீட் எங்கே?" ஒருவன் கத்தினான்

“என்ன சீட்டு? என்னடா ஒண்ணும் புரியலையே”

சேகர் நிதானிப்பதற்குள், “அவன் சீட்டை அமுக்கி விட்டான். ஒன்னும் புரியாத மாதிரி நடிக்கிறான்.. எல்லாம் பணம் படுத்துற பாடு.”

மற்றொருவன் கத்தினான்

“உண்மையிலேயே எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் மாமாவின் வீட்டுக்கு சென்று இப்பத் தான் வருகிறேன்.”

சேகர் முடிப்பதற்குள் “எல்லாம் நாடகம். எங்கோ பதுக்கிவிட்டுத்தான் வந்திருக்கிறான். அவன் நடிக்கிறான். சீட்டை மரியாதையாகக் கொடுத்துவிடு.. அவன் மிக அருகில் போய் அவனிடம் கையை ஓங்கிகொண்டுக் கேட்டான்

“என்ன சேகர் நம்ம லாட்டரி சீட்டுக்கு 10 லட்சம் பரிசு விழுந்திருக்கு. முதல்லே சீட்டை எடு. நாங்களெல்லாம் காலேலேருந்து காத்துக் கிட்டுக் கிடக்கோம்”

“ஓ அந்த லாட்டரி சீட்டு கேக்குறியா” சேகர்.

“ஐயாக்கு இப்பதான் புரியுது. இப்ப பாரு புது கதை விடுவாரு.”

உள்ளே போய் பாக்கலாம். ஒருவன் சொல்லிக்கொண்டே சேகரைத் தள்ளிக்கொண்டு உள்ள போக முயற்சி செய்து உள்ளே போகலம் வாங்கடா” மற்றவர்களை அழைத்தான்.

“உள்ளெ யாரும் வரவேண்டாம். என்ன நினைச்சுக்கிட்டு இருக்கீங்க” சேகர் ராசநாயகம் இரண்டு பேரும் கண்டித்து கூறினார்கள். சேகரும் அவன் அப்பாவும் அவர்களைத் தடுக்க முயற்சி செய்து கொண்டிருந்தார்கள்.

கோதையும் அவங்க அம்மாவும் வெளியே வந்து மற்றவர்கள் உதவி கேட்டு வந்தார்கள்.

‘அட விடுடா.’ நால்வரும் வீட்டுக்குள் நுழைந்தனர். ஒரே கைகலப்பு. சேகரை ஒருவன் அருகிலுள்ள பைப்பால் இடுப்பில் அடிக்க நிலை தவறி விழுந்தான். அவன் மேல் நடந்து உள்ளே சென்றார்கள்.

உதவிக்கு வந்தவர்கள் நிலைமையை கட்டுக்குள் கொண்டு வந்தார்கள். சண்டை விலக்கப்பட்டது.

சேகர் படுத்தபடி இருந்ததால் சேகரை எல்லோரும் சேர்ந்து எழுப்பி வைத்தார்கள். பைப் அடி பலமாக இடுப்பில் விழுந்ததால் நிற்க முடியவில்லை.

நண்பர்களின் ஆத்திரம் கோபம் அடங்கவில்லை 10 லட்ச ரூபாய் லாட்டரியில் விழுந்து நமக்கு ஒன்றும் கிடைக்காமல் போய்விட்டது என்ற வருத்தம் கோபம் எல்லாம் தெரிந்தது.

உதவிக்கு வந்தவர்கள் “எல்லோரும் கொஞ்சம் பொறுமையாக இருங்கள் எல்லோரும் நண்பர்கள்”.

“சேகர் சீட்டை உன்கிட்டே கொடுத்தாங்களா?”

“என்கிட்டத்தான் கொடுத்தாங்க”

“சீட்டை எங்கே வச்சே?”

சீட்டுகள் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று பாண்டில் அந்தப் பாக்கெட்டில் போட்டு வைத்திருந்தேன்.

கோதை சேகர் போட்டு போன அந்த பாண்டை கொண்டுவாம்மா.

இந்த வரேன் சார். பாண்டை வாஷிங் மெஷினில் போட்டிருக்கேன் என்று பாண்டை எடுத்து வந்தாள்.

அந்த பாக்கெட்டில் சீட்டுக்கள் இருந்தன. பரிசு விழுந்த சீட்டு மட்டும் முற்றிலும் சிதைந்து இருந்தது. மற்ற சீட்டுக்கள் ஓரளவு பார்க்கும்படி இருந்தது. வந்திருந்தவர்களிடம் சீட்டுக்களைக் காண்பித்தார். அவர்கள் உண்மை உணர்ந்தார்கள். எல்லோருக்கும்

நிலைமை புரிந்தது. வந்த அதிர்ஷ்டம் போய் விட்டது என்று புலம்புவதை தவிர செய்வதற்கு ஒன்றுமில்லை என்று விளங்கிவிட்டது..

சேகரை ஆஸ்பத்திரிக்கு கொண்டு போகும்படி ஆகிவிட்டது. சேகரை இரண்டு நாள் ஆஸ்பத்திரியில் வைத்துவிட்டு அவனுக்கு இடுப்பில் பலமாக அடிபட்டு இருப்பதால் கட்டு போட வேண்டும் என்றும் 15 நாட்கள் அசைவின்றி இருக்க வேண்டும் என்றும் சொல்லி அனுப்பிவிட்டார்கள்.

15 நாள் கழித்து ரிவியூக்கு சென்றபோது சேகர் பூர்ணமாக குணமாகி விட்டதாகவும், ஆனால் அவன் பலமான தாக்குதலால் தந்தையாகத் தகுதியற்றவனாகி விட்டதாகவும் டாக்டர் சொன்னார். அவர்கள் மூவரும் அப்படியே உறைந்து போனார்கள்

கோதை சந்திராவிடம் “அம்மா நாம் அவரை சாமியாரிடம் கூட்டிக் கொண்டு போகலாமா” என்று கேட்டாள்.

“இப்ப எதுக்கு?. எனக்கு ஒண்ணும் புரியவில்லை. நான் ஒரே குழப்பத்தில் இருக்கேன். நடக்கக்கூடாது நடந்து விட்டது. அவரும் ஒரேடியாக பேச்சேயே நிறுத்திவிட்டார். இந்த சமயத்தில் சாமியாரிடம் போய் நாம் என்ன கேட்பது? அவர் என்ன சொல்வார் என்று நினைக்கிறே?”

“இல்லம்மா. நீங்க சரியாக ஞாபகப்படுத்திப் பாருங்க. அவர் என்ன சொன்னார் தெரியுமா? நீங்கள் எதற்காக எதைக் கேட்க இங்கே வந்திருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். அதற்கு நான் அடுத்த முறை சொல்லுவேன் என்று சொன்னார். அவருக்கு இது மாதிரி நடக்கப்போகிறது என்று ஏதாவது தெரியுமா? எதற்காக அது மாதிரி சொன்னார்? என்று கேட்கலாம்

“இப்போது தெரிந்து நம்ம என்ன பண்ண போறோம்?”

“சரிம்மா உங்களுக்கு வேண்டாம். விட்டு விடுங்கள். நான் அவரிடம் உங்களுக்கு முன்னே தெரிந்திருந்தால் கொஞ்சம் சொல்லி இருக்கலாமே. நாங்கள் ஏதாவது செய்து தடுத்திருக்கிறலாம் அல்லவா? ஏன் எங்களிடம் சொல்ல மறுத்து விட்டீர்கள்? என்று கேட்கப்போகிறேன். அது ஒன்றுதான் “

“ஆமாம் நினைவுக்கு வருகிறது அவரிடம் சண்டை போட்டு என்ன ஆகப் போகிறது?. நடந்தது நடந்து விட்டது”

“அவர் ஏதாவது சொல்லுவாரா? என்று தெரிந்து கொள்ளலாம்”

“உனக்கு இவ்வளவு இவ்வளவு ஆர்வம் இருக்கும்போது போய் பார்த்துவிடலாம்”

கோதை உடனேயே கார் எடுத்து வந்து சேகரை அழைத்துக்கொண்டு கோதையும் சந்திராவும் சாமியாரிடம் சென்றார்கள்.

அன்று என்னமோ கூட்டம் அதிகமில்லை.

சேகரைப் பார்த்து சாமியார் “என்ன காரில் வந்து விட்டாயா” என்றார். அவர் குரலில் வருத்தமே மிகுந்திருந்தது. பரிகாசம் இல்லை.

“இப்படி ஆகிவிட்டதே” சந்திரா அழுதுகொண்டு சொன்னார்.

“விதி வலிமையானது. விதியை மாற்றுவது முடியாதது.” சாமியார் வேதனையுடன் சொன்னார்.

“நான் ஒன்று கேட்கலாமா?” கோதை கேட்டாள்.

“தாராளமா” சாமியார் சற்று சோகத்துடன் சொன்னார்.

“உங்களுக்கு இந்த மாதிரி நடக்கும் என்று தெரிந்திருந்தால் ஏதும் சொல்லி இருக்கலாமே. ஒரு கோடு காட்டி இருக்கலாமே. நாங்கள் ஏதாவது செய்து அதை தவிர்த்து இருக்கலாம் அல்லவா?”.

சாமியார் சிரித்தார். அதில் உயிர் இல்லை.

நீங்கள் கூறுவது எனக்கு நன்றாக புரிகிறது. உங்களுடைய கவலை உங்களுடைய கேள்வி நியாயமானது தான். ஆனால் ஒன்று புரிந்து கொள்ளுங்கள். இங்கு யாரும் கடவுள் இல்லை. நாம் எல்லோரையும் விதி என்ற அமைப்பு நடத்துகிறது. அது என்ன நடக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறது.. அதை எப்படி நடத்த வேண்டும் என்று தீர்மானிக்கிறது.. நாமெல்லாம் உண்மையில் அந்த பிரபஞ்ச சக்தியின் முன் சிறு பொம்மைகள். நம்முடைய சக்தி மிகவும் குறைவானது. நான் இந்த செய்தியினால் வருத்தப்படவில்லை என்று நினைக்கிறீர்களா? எல்லோரிடமும் எப்போதும் அன்பு காட்டுவது தான் நம்முடைய இந்து மதம். அதற்கு வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்று கிடையாது. ஆனால் அது ஒரு நியதியின் படி செயல்படும். இந்த செயலை விதி என்று கூறுவார்கள். இல்லை இயற்கை எது வேண்டுமானால் கூறலாம். எனக்கு ஓர் அளவிற்கு உங்களுக்கு நடக்கப் போவது தெரியும். அதுவும் இறைவன் குடுத்த வரம். ஆனால் எப்படி நடக்கப் போகிறது? எப்போது நடக்கப் போகிறது? யாரால் நடக்கப் போகிறது? எதற்காக எடுக்க போகிறது? இதெல்லாம் தெரியாது.

“அம்மா எனக்கு அந்த மாதிரி நடக்கப்போவதை முன்னால் அறியும் சக்தி எல்லாம் இல்லை. ஆனால் உங்களுக்கு குழந்தை பேரு இல்லை என்று மட்டும் எனக்குத் தெரிந்தது. அதை நான் எப்படி சொல்ல முடியும்? சாதகமான விஷயமாக இருந்தால் சொல்லலாம் “அதனால் தான் அடுத்தமுறை வரும்போது சொல்கிறேன் என்றேன். ஆனால் இந்த மாதிரி நடந்து இப்படியாகும் என்று சொல்ல முடியாது. அதுதான் விதி.

"உங்களுக்கு சமாதானத்திற்காக என்று வேண்டுமானாலும் நீங்கள் எடுத்துக் கொள்ளலாம். இப்போது கூறுவது ஓரளவிற்கு என் கூற்றை நியாயப்படுத்தும் என்று நான் நினைக்கிறேன். போன மாதம் என்னை தேடி சில அன்பர்கள் வந்திருந்தார்கள். மறுநாள் ஒரு சின்ன பிரார்த்தனை. அவர்கள் என்னிடம் விடைபெற வந்தார்கள். எனக்கு அவர்கள் மறுநாள் பிரார்த்தனையில் கலந்து கொள்ளுவது மாதிரி தெரிந்தது. அவர்களிடம் இரவு தங்கி விட்டு ஒரு நாள் பிரார்த்தனையின் பின்பு செல்லலாமே என்று ஒரு யோசனை தெரிவித்தேன். அவர்கள் அதற்கு மறுப்பு தெரிவித்து அவசரமான வேலையின் நிமித்தம் அவர்கள் போக வேண்டி இருப்பதால் அவர்கள் உடனே கிளம்ப வேண்டும் என்று என்னிடம் சொன்னார்கள். சரி அப்படியானால் செல்லுங்கள் என்று அவர்களுக்கு விடை கொடுத்தேன். அவர்கள் சென்ற அறை மணி நேரத்தில் நேரத்தில் அவர்கள் சென்ற கார் விபத்துக்குள்ளாகி ரிப்பேர் ஆகிவிட்டது. பெரியதாக ஒன்றும் இல்லை. சிறு விபத்துதான். அருகில் உள்ள மெக்கானிக்கிடம் சென்று காரை சரி. செய்யும் படி கேட்டார்கள். அதற்கு அந்த மெக்கானிக் ஒரு காரின் உதிரி சாமான் ஏதோ ஒன்று தேவை என்றும் அது வாங்குவதற்கு ஒரு நாள் ஆகும் என்றும் நீங்கள் பக்கத்தில் ஏதாவது லாட்ஜ் ஒன்றில் தங்கிக் கொள்ளுங்கள் என்றும் சொன்னார். அந்த வீட்டு பெண் மக்கள் எதற்கு லாட்ஜில் தங்க வேண்டும். ஒரு கார் எடுத்துக் கொண்டு ஆஸ்ரமத்துக்கே போய்விடலாம் என்று திரும்பி வந்தார்கள். மறுநாள் அந்த. அந்தப் பிரார்த்தனையை முடித்துக் கொண்டு மீண்டும் என்னிடம் விடை பெற்றார்கள். விடைபெறும்போது நீங்கள் கூறியபடியே நாங்கள் பிரார்த்தனையில் கலந்து கொண்டோம் என்று சொன்னார்கள் இதில் என் பங்கு எதுவும் இல்லை என்று எனக்கு தெரியும். அதுதான் விதியின் விளையாட்டு.

ஊர்க்குழந்தைகள் எல்லாம் நம் குழந்தைகள் தாம். உனக்கு அவர் குழந்தை. அவனுக்கு நீ குழந்தை. இவள் சாதாரண

பெண்ணல்ல. இவள் பெண்களின் முன்னேற்றத்திற்காக பாடுபட போகிறவர். கோதையைப் பார்த்து "நீ செய்து கொண்டிருப்பதை இன்னும் சிறப்பாக செய். உனக்காக பெரிய விருதுகள் காத்துக் கொண்டிருக்கின்றன. உன்னால் நிறைய பெண்கள் பயனடைவார்கள்." என்கிறார்.

மோடி தனது மன் கீ பாத் நிகழ்ச்சியில் ஒரு கிராமத்திலிருந்து வருஷத்திற்கு 20 பேர் டிகிரி தொலைதூரக்கல்வி மூலம் வாங்குகிறார்கள். அந்த 20 பேருமே பெண்கள். இதை தொடர்ந்து நடத்திக்கொண்டிருப்பது கோதை என்ற பெண் என்று குறிப்பிட்டார். அதை தொடர்ந்து கோதைக்கு எவ்வளவோ பாராட்டுக்கள் தொலை பேசி மூலம் வந்தன. பெண்களுக்காக நடத்தப்படும் இரண்டு மூன்று பத்திரிகைகளில் அட்டையை அலங்கரித்தார்.

இந்த பாராட்டுக்கள் அவளை மேலும் ஊக்கு வித்தன.

கிராமப்புற அடித்தட்டு பெண்களின் கல்வி, காதாரம், ஆரோக்கியம், குழைந்தை வளர்ப்பு மேம்படுவதற்கு கோதை தன்னை அர்பணித்துக்கொண்டாள். கிராமம் கிராமமாக சுற்றினாள். அவளின் குடும்பம் அவளுக்கு பெரிய துணையாக நின்றது.

நாட்டின் உயரிய விருதான பத்மஸ்ரீ விருதை பெற்ற திருமதி கோதை என்ற பெண்மணியின் வாழ்க்கைத் தொடரை படித்து விமர்சனங்களை பகிர்ந்து கொண்ட அன்புள்ளம் கொண்ட வாசகர்களுக்கு மிக்க நன்றி.

. . . . . . .